*Tirāviṭa nāṭu*
*Malar 18, ital 19*
*November 22, 1959*

Record no. 1005

திராவிடநாடு

22—11—59 | வார வெளியீடு | விலை 16 காசு

# சூடிடுவாய் வெற்றி ஆரம்!

—[ நா. இளங்கோ ]—

கீழான மொழிசொன்னான் நம்மைப் பார்த்து,
கிளர்ந்தெழுந்தான் நம்நாட்டான் அந்த நாளில்!
வாழாமல் செய்கின்றான் தமிழை இங்கு,
வாயேதும் பேசாமல் வாழுகின்றாய்!
பாழாக நம்நாடும் போன பின்பு
பாழ்மரமாய் நிற்பாயோ? தோழா! இன்றே,
தாழாமல் வாழஉன் நாட்டை மீட்பா
தமிழழிக்க வருவாரின் சூழ்ச்சி வெல்வாய்!

வீழ்ந்திறந்து போகாமல் ஏனோ, இன்னும்
வீட்டெலியாய் வாழுகின்றாய் வீணாய்? இந்தி
சூழ்ந்ததுவும் தெரியாமல் தூங்குகின்றாய்!
சூதறியாச் செந்தமிழா! எந்தன் தோழா!
ஆழ்ந்தறிந்து பார்த்திடுவாய் கொஞ்ச நேரம்
அறிவோடு சேர்த்திடுவாய் நெஞ்சில் வீரம்
தாழ்ந்தழிந்து தமிழொழியச் செய்யும் சூழ்ச்சி
தகர்த்தெறிந்தே சூடிடுவாய் வெற்றி ஆரம்!

# நீர்நிலை நின்ற தவம்!

—(கோ. தமிழ்ச்செல்வன்)—

பரியின் மீதேறி வீதியிலே பவனி வந்தான் பாண்டியன். கண்டாள் ஒரு காரிகை அவன் திண்டோள் வலியினையும், திகழ் மார்பந் தன்னையும்! கருத்திலே அவன் ஓவியமானான். கண்கொட்டாமல் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள், கயல் விழியாள்! வண்டுகள் மொய்க்க வளர்தேறல் வடியும் பூச்செண்டுகள் புரண்டு மணம் வீசிக்கொண்டிருந்தன அவன் மார்பில்! அவற்றிடையே நீலக்குவளை மலரால் தொடக்கப்பட்ட மாலைகளும் அவன் மார்பில் கோல எழிலுடன் காட்சியளித்துக் கொண்டிருந்தன. மாறி மாறி, அவன் உலாவரும் தோற்றத்தை வீட்டு வாயிலில் நின்றுபார்த்துக்கொண்டிருந்தாள். குதிரைமேல் இருந்த வழுதி கையில் கூர்வேல் ஒன்றினையும் வைத்திருந்தான். நெடுநேரமாயிற்று. பார்த்தவளின் புறக்கண்கள் ஓய்ந்தன. ஆனால் மனக்கண்கள் செயல்படத் தொடங்கின. இதற்குள் பாண்டியன் அத்தெருவைக் கடந்து அப்பாலெங்கோ சென்றுவிட்டான். ஆற்றாமையால் வருந்திய அவளைத் தோழி பஞ்சணையில் படுக்கச் செய்தாள். அவள் உறங்குவாளா? உள்ளம் உறங்குமா? பாண்டியனின் மார்பிலே கிடந்த மாலைகளை மனக்கிழியில் காண்கிறாள். அந்தக் குவளை மலர்த்தாரும் கண்ணில் படுகிறது. "ஆகா! அந்தக் கார்நறு நீலக் கடிக்கயத்துக் குவளைக்குக் கிடைத்த பேறுதான் என்னே! அது நீர் நிலையில் நெடுநேரம் நின்று தவம் செய்ததாலன்றோ பாண்டியனின் மார்பிலே தோய்ந்து கிடக்கிறது. நீர் நிலையில் ஒற்றைக் காலில் நின்றே தவஞ் செய்ததல்லவா அது? அதனால் அது அப்பேறு பெற்றது. நான்-பாவியாகிய நான் நல்வினைசெய்திருந்தாலன்றோ அந்த நன்மாறனை அடையலாம்; தீவினையேன் யான்; அஃறிணைப் பொருளான குவளைமலர் செய்த தவம்கூட யான் செய்யவில்லையே!" என்று பலவாறாக நினைத்து வருந்துகிறாள்.

குவளைமலர் தடாகத்திலே — நீரின் மேல்நின்று பூக்கும். அதன் தண்டு நீர் நிலையின் அடிவரை சென்றிருக்கும். அதனால் அது ஒற்றைக்காலில் நின்று தவம் செய்ததோ? என்று நினைக்கும்படி தோற்றமளிக்கிறது, இத்தோகை மயிலாளுக்கு! இயல்பாகவேகுவளை மலர் கொண்டிருந்த தன்மையை இவ்வாறு தவஞ்செய்து பாண்டியன் மார்பில் தழுவிக்கிடந்த தன்மைக்கு ஒப்பிடுகிறாள். ஏக்கம் அதிகரிக்கிறது; தூக்கம் வந்தால் தானே?

இத்தகைய எழில்மிக்க கருத்தமைந்த பாடல் முத்தொள்ளாயிரம் என்ற ஆரத்திலிருந்து எடுக்கப்பட்ட ஓர் முத்து. பாடலைக் காணுங்கள்:

**கார்நறு நீலக் கடிக்கயத்து வைகலும்**
**நீர்நிலை நின்ற தவங்கொலோ?-கூர்நுனைவேல்**
**வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்**
**கொண்டிருக்கப் பெற்ற குணம்.**

வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற் கொண்டிருக்கப்பெற்ற குணம், கார்நறு நீலக் குவளைக்கு நீர்நிலை நின்ற நெடுந்தவத்தால் ஏற்பட்டதோ என அவள் கற்பனை செய்வதுபோல் அமைந்துள்ள இவ்வெண்பாவின் சொல்நயமும், பொருள் நயமும் வியந்து பாராட்டத் தக்கது.

மற்றொரு நங்கை மாறன்பால் மாறாத காதல்கொண்டு மனக்கிழியில் வழுதியின் ஓவியத்தையே வரைந்திருந்தாள். எப்பொழுதும் பாண்டியனின் நினைவாகவேயிருந்தாள், அவ்வேந்திழையாள்! அவள் மனநிலை சுற்றியிருந்த பலருக்கும் தெரிந்துவிட்டது. அறிந்த நங்கையர் அலர்தூற்ற ஆரம்பித்து விட்டனர். தலைவிக்கு வருத்தம் மிகுந்தது. அந் நங்கையர் செயலைத் தன் தோழியிடம் கூறி ஆறுதல் பெறுகிறாள்.

வேல்போன்ற கூரிய கண்களையுடைய தோழி! பாண்டியனுடைய அழகிய வையையாற்றில் யான் நெடுநேரம்நீராடிப் புனலில் பொருந்தும்படியாகக் கைகளை வீசியாடினால் அவர்கள், "இதோ பார், பாண்டியனின் மீதுள்ள அளவற்ற பற்றுதலாலன்றோ அவன் நதியாகிய வையையில் நெடுநேரம் நீராடுகிறாள்; பார்த்தீர்களா, குமுதவாயின் சிவப்பினை விழிவாங்க, வழியின் வெண்மையை செவ்விதழ் ஏற்கப் புனலில் குடைந்தாடுவதை!" என்கிறார்கள். அவ்வலர் மொழிக்கு இலக்காகக் கூடாதே என்று யான் வையைப் புனலில் நீராடாது ஒழிந்து வாளா இருந்தால், "பார், பார், இந்தப் பாவையை! பாண்டியனின் மீதுள்ள திராக்காதல் ஊராருக்குத் தெரிந்துவிடுமேயென்று நீராடாது இருக்கிறாள். மாறாகக் காதலால் மாறனை மனத்திடையேவைத்துப் போராடிக்கொண்டிருக்கும் பொற்சிலையாள்!" என்று கூறுகிறார்கள். 'என் செய்வேன் நான்? நீராடினாலும் குற்றம்; அது செய்யாதொழிந்திடினும் குற்றம்! என் செய்கேன் ஏழையேன்?' என்று கூறி ஏங்குகிறாள் மாங்குயிலின் இனிமையினையும் மிஞ்சிய தேங்கரும்புச் சொல்லாள்! அவள் மனநிலையை அறிந்து ஆறுதல் கூறினாளோ, இல்லையோ அவள் தோழி? ஆனால், பாவையின், "இருதலைக் கொள்ளி எறும்புபோன்ற" இந்நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறார் புலவர், ஓர் பாடலில்! அது இது:

**ஏற்பக் குடைந்தாடில் ஏசுவர் அல்லாக்கால்**
**மாற்றியிருந்தாள் எனவுரைப்பர்—**
**வேற்கண்ணாய்**
**கொல்யானை மாறன் குளிர்புனல் வையைநீர்**
**எல்லாம் எனக்கோர் இடர்.**

* * *

நங்கைபொருத்தி தன் இல்லின் கண் இருந்தாள். வெளியே மங்கல

(4-ம் பக்கம் பார்க்க)



# குறுக்கே நிற்காதீர்

18 ஆண்டுச் சந்தா ரூ. 8. (22-11-59) தனிப் பிரதி 16-காசு [ இதழ் 19

'அமிழ்தினும் இனிது எமது தமிழ்மொழி' என்று தமிழ்ப் பெருங்குடி மக்கள் உணர்ந்தனர். அந்த உணர்வோடு, தமிழ் மொழியும், மக்களும், பண்பாடும், நிலையில் தாழ்ந்து, வழக்கு இழந்து, சீர்குலைந்திருந்தலையும் கண்டனர். ஈடு இணை இல்லாத நம்மொழி இழிநிலை உறுவதா, என்று நல்லவர் பலர் எண்ணினர். எப்பாடுபட்டேனும், தமிழுக்கு உரிய சிறப்புக்களை உயிருள்ளவையாக்கவேண்டும் என மனமார அவர்கள் எண்ணினர்.

தமிழுக்கு இருந்த இழிவுகளில் ஒன்று—இடைக்காலத்தில் ஏற்பட்ட ஒன்று—தனிநிலை கெட்டு, தனித்து நின்று பொருள்விளக்கம்செய்து, தூய்மையோடு துலங்கிடமுடியும் என்ற நிலைமாறி, வடமொழியோடு கூட்டு ஏற்படுத்திக்கொண்டதாகும், வடமொழியில் உள்ள சொற்கள், கருத்துக்கள் பலவும் தமிழில் கலந்தும், கரந்தும் வாழ்ந்தன. மயங்கிக்கிடந்த தமிழன் இது மாசு என்பதனை உணராமலே உறங்கினான்—நெட்டைத் தூக்கமாகத் தூங்கினான்.

ஒருநாள் இளஞாயிற்றின் வெங்கதிர்களின் 'சுள்' என்ற ஒளிபட்டு உணர்வு பெற்றான்; உயிர்த்து எழுந்தான். சுற்றிலும் பார்த்தான். தன் நிலை உணர்ந்தான். தான் உறங்கியபோது ஏற்பட்டுவிட்ட கேடுகள் பலவாய்ப் பரந்துகிடந்ததைக்கண்டு கலங்கினான். தன் பண்பாடு, வீரம் முதலியன தேய்ந்திருந்ததோடு, தன் மொழியும் தகைமைகெட்டு இருக்கக் கண்டான். என்ன செய்வது என்று எண்ணினான்.

தன் ஆற்றலுக்கும், நிலைமைக்கும் ஏற்ற பல முயற்சிகளை மேற்கொண்டான். இருள் நீங்கி ஒளி பிறத்தல்போல, தன் இழிவு நீங்கிடக் கண்டான்; மகிழ்ந்தான்.

அந்த மகிழ்ச்சிக்கடலில் ஒரு துளிதான் "திரு" "திருமதி". "ஸ்ரீ"யும் "ஸ்ரீமதி"யும் எங்கும் நிறைந்து விளங்கின — ஒரு காலத்தில். தமிழ்ப்பெயர்களுக்கு முன்னால், தலைமையேற்று நின்றன அந்தச் சொற்கள். 'அடிமை இவன்' என்று நெற்றியிலே பட்டயம் இருப்பதைப்போல் இந்தத் தமிழன் எனக்கு அடிமை என வடமொழி "ஸ்ரீ" சொல்லிக்கொண்டிருந்தது, தமிழ்ப் பெயர்களுக்கு முன்னால் நின்று.

இன்று இந்த நிலைமாறி தமிழர்களிலே பலர் திருவையும் திருமதியையும் வழக்கில் கொண்டுள்ளனர். பல ஊராட்சி மன்றங்களில், நகராட்சி மன்றங்களில்—சென்னை மாநகராட்சி மன்றத்தின் வழிநின்று—மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

இந்த நிலைகண்டு நல்ல உள்ளம் படைத்தவர்கள்—கட்சி வேறுபாடுகளைக் கடந்து நின்று—மகிழ்ச்சி கொள்ளுகின்றனர். மானம் பிழைத்ததே என பெருமிதங்கொள்ளுகின்றனர்.

ஆட்சியில் உள்ளவர்கள்—அமைச்சர்கள் என்ற 'அரும்பெரும்' பதவிவகிப்பவர்கள், இந்த மாற்றத்தை—ஏதோ தங்களால்தான் செய்ய இயலவில்லை என்றாலும், இவர்களாவது செய்தார்களே, அந்தத் துணிவாவது, தமிழ்ப்பற்றாவது அவர்களுக்கு இருக்கிறதே—என்று எண்ணி, வரவேற்றுப் பாராட்டி நன்றி தெரிவித்திருக்கவேண்டும். அப்படிச் செய்யாதது மட்டும் அல்ல — மாறாக இந்த நல்ல தொண்டு செய்தவர்களை எள்ளி நகையாடுகின்றனர், ஏளனம் பேசுகின்றனர். இவர்களை என்னென்பது?

அமைச்சரவையிலேயே, அனுபவம் மிக்குடையார் என்று பக்தவத்சலனார் சுட்டிக் காட்டப்படுகின்றார். அவர் தனக்குத் தமிழ் தெரியும் என்கிறார்; தமிழ்க் கூட்டங்களில் பேசுகின்றார்; சில ஆண்டுகளுக்கு முன் தமிழ் வளர்ச்சிக் கழக விழாவில் ஆராய்ச்சிச் சொற்பொழிவே செய்திருக்கிறார்; ஒரு தமிழர்—ஆனால் இத்தனை இருந்தும்—தமிழின் வளர்ச்சிக்காக ஒரு துரும்புகூட எடுத்துப்போடாமல், தமிழ் வளர்க்க நினைப்பவர்களின்மீது காய்ந்து விழுகின்றார்.

"திரு" என்று ஏன் மாற்றவேண்டுமோ தெரியவில்லையே. திருரங்கம், என்று எழுதுவார்களா இவர்கள்? நாங்கள் என்ன ஸ்ரீவல்லிக்கேணி என்றா மாற்றச் சொல்லுகின்றோம்" என்று ஏதேதோ பேசுகின்றார். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத சொற்களை, பொருள் இல்லாத வகையில் எடுத்துச் சொல்லுகின்றார். எதிர்த்துக் கேட்கும் ஆற்றலோ, வாய்ப்போ யாருக்கு இருக்கிறது என்று கருதுகின்றார் போலும்!

பித்தர் கூற்றுக்குப் பொறுப்புள்ளவர்கள் விடை சொல்லிக்கொண்டிருக்கமாட்டார்கள், தமிழ் அறியாதார் நிலைக்கு நாம் இரங்குவோம்! திரு ரங்கம் அன்று; திரு—அரங்கம் என்ற இரண்டு சொற்கள் சேரும்போது இடையில் வகரம் தோன்றி "திருவரங்கம்" என்றாகும் என்பது தமிழ் இலக்கணப் பாடங்களில் தொடக்க நிலையில் உள்ள ஒன்று. இதனை, ஒரு அமைச்சருக்கு, அநுபவம் மிக்க ஒருவருக்கு, எடுத்துக் காட்டவேண்டிய நிலை வாய்த்திருக்கிறதே என்று நோவது தவிர, வேறென்ன செய்யலாம்.

இவர்க்குத் துணை நிற்கும் நோக்கோடு தருமபுரம் மடத்துத் தம்பிரான் அவர்களும் அண்மையில் "ஸ்ரீ"யின் சிறப்பை எடுத்தோதியிருக்கிறார்.

இவர்களது போக்கை என்னென்பது? "உடன் பிறந்தே கொல்லும் நோய்" என்பது ஒரு பழைய பாட்டின் அடி, எவ்வளவு பொருள் பொதிந்த தொடர்!

இவர்களேயன்றி, இவர்களொத்த வேறுசிலரும் நாட்டில் உளர். தமிழர்கள்—என்றாலும் தமிழ் வளரத் துணையாக இருப்பதற்கு மாறாகத் தடையாக இருக்கின்றார்கள் அவர்கள்.

"மெத்த வளருது மேற்கில் கலைகள்" என்று சொல்லும் வகையில் அங்கே நித்தம் ஒரு துறையில் மொழி, வளமும் வளர்ச்சியும் பெறுகின்றது. அந்த முறையில் நமது அருமை மொழி வளர, வாழ நாம் செய்யவேண்டிய பணிகள் எண்ணிலடங்காது கிடக்கின்றன. அவற்றை ஏற்றுச் செய்தற்கு ஏற்ற ஆற்றலும் பிறவும் வளர்த்துக்கொண்டு தொண்டினைத் தொடங்கவேண்டிய நேரம் இது. இந்த நேரத்தில், திருமண நேரத்தில் சிப்பை எடுத்து ஒளிப்பதுபோல், சிலர், திரு வேண்டாம், "ஸ்ரீ"யே இருக்கட்டும் என்று வீணொலி எழுப்புவது கண்டு நாம் வேதனைப்படுவதோடு, அவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகின்றோம்:

> "நல்லது செய்தல் ஆற்றீராயினும்
> அல்லது செய்தல் ஓம்புமின்."

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு புலவன் சொல்லி விட்டுப் போய்விட்டான் இதனை. "நல்லதுதான் செய்யவில்லை என்றால், போகட்டும் — தீமையாவது செய்யாமலிருங்கள்" என்று அவன் சொன்னதை இன்று இத்தகையவர்கள் முன்வைத்து வணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றோம்!—குறுக்கே நிற்காதீர்—விடுங்கள் வழியை என்று.

தமிழ் வளருவதையோ அல்லது தமிழுக்குப் புத்துயிர் அளிப்பதையோ காணப்பொறாதவர்கள்—தமிழின் வளர்ச்சியும், தனித்தியங்கும் வெற்றியும் பெறுவதை மீண்டும் காணும்போது உளங்கொள்ளாது உணர்விழந்து "தமிழ் மொழிக்கு இத்துணை ஏற்றமா" என்று ஏங்குபவர்கள்—தமிழ் மொழியைத் தம்மொழியென்று கூறத் தயங்குபவர்கள் வேண்டுமானால் தருமபுரத் தம்பிரான் போன்றார் பட்டியில் சேரட்டும். ஆனால், தன்னையொரு தமிழன் என்று சொல்லிக் கொள்வதில் பெருமைகொண்டு, அதன் வாயிலாகப் புகழ்தேட விரும்பும் நிலையில் இருப்போர் "ஸ்ரீ வல்லிக்கேணி" பேசித் தமிழ் மொழியை ஏளனம் செய்வதைத்தான் நம்மால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. இவர்கள் அதிகாரத்தைக் கையில் வைத்துக்கொண்டு ஆட்சிப் பீடத்தில் இருப்பதால்தான் மீண்டும், மீண்டும் தமிழ் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்காதீர்கள் என்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறோம்—தமிழ் வளர வகை செய்யாவிட்டாலும், வழியையாவது மறைத்து நிற்கவேண்டாமென்று கூறுகின்றோம்.

2-ம் பக்கத் தொடர்ச்சி

முழக்கம் பொங்கி எழும்பும் ஒலியைக் கேட்டாள். என்னவென்று பார்க்க வெளியே ஓடிவந்தாள். அழகிய வாயிலிலே நின்று கொண்டு ஆர்ப்பாட்டம் நடைபெறும் அத்தெருவைப் பார்த்துப் போர்க்கோலம் கொண்டுவிட்டனரோ ஆடவர்? எனப் பயந்தாள். பாண்டியன் உலாவருகின்றான் என்ற சேதி காதில் எட்டியது. தொலைதூரத்தில் அந்தக் கலைமானின் கண்கள் அலைமோதிப் பாய்ந்தன. மேருவில் இலச்சினைப் பொறித்து மீண்ட பாண்டியனின் மீனக்கொடி தோன்றியது. நீரிலே சுற்றிச் சுழன்று வட்டமிடும் கயற்சின்னம் வரைந்த அக்கொடியைக் கயல்விழியாள் கண்டாள். சிறிது பொழுது கழிந்தது. பின்னர், போர்வேட்ட பெருந்தோளன் பாண்டியனின் தேர்காட்டத் திகழ்ந்தது அவ்வீதி. மணிகள் கோர்க்கப்பட்ட மாலை, மாணிக்கங்களைப்பொறித்தமகரதோரணம், முத்துக்கள் தொங்கவிடப்பட்ட கொத்தாரம் ஆகிய இவையாவும் துலங்க, அசைந்தாடிவந்த தேரின் மீது அமர்ந்திருந்தான் அரியேறனைய வரிவில் புருவத்தான்; வண் மதுரை கொண்டான்; வழுதியெனும் பெயரினன்! தேர் அவள் வீட்டை நெருங்கிற்று. மூவேந்தர் பரம்பரையில் முன் உதித்த முதுக்குடியின் தோன்றல், முகையேர் முல்லை எயிறுகள் நகையேர் பூக்க, முத்தொளி பரப்பிய முடியணிந்து தோன்றினான். அடிபணிந்து திறை செலுத்தும் அயல் மன்னர் வணங்க, தென்னவர் முடியணிந்து வருகின்ற திகழ்கோலங் கண்டாள்—தன்னை மறந்தாள்—தலைவனைப் பார்த்தாள்—தளிர்க்கொடி போல் நின்றிருந்தாள், அத்தையலாள்! மன்னுதி மன்னனும் அவன் மார்பிலே கிடந்து புரளும் பொன்னனை முத்தாரத்தையும் தன் கண்ணாலே கண்டாள்; என்னாகுமோ நிலை என அஞ்சினாள் எழிற்றோகை! இதற்குள், தென்னவனின் தேர் மறைந்தது; திகழ் முத்தாரம் புரண்ட திண்மார்பும் மறைந்தது; மணிமுடி மறைந்தது; மன்னவனின் மதிமுகமும் மறைந்தது — அதனால் மங்கையினது எழில் நலமும் கரைந்தது! வீதியைக் கடந்து மன்னன் வெளிச்சென்ற பின்னும், பளிச்சென்று அவன் தோற்றம், ஒளிச்சுடராம் மணிபோலத் தோன்றிற்று அவள் மனதில்!

பாண்டியனின் நினைவால் பாவைக்கும் பசலைநோய் வந்துற்றது; மாந்தளிரன்ன மாலை நிறம் மறையலாயிற்று. ஏக்கம் தூக்கத்தை விரட்டியது ஆக்கர், நலனழிந்த அவள் நிலையைக் கண்ட அன்னை, "வெளிச் செல்லுதலைத் தவிர்க; வீதியை நோக்கற்க" எனக் கூறி வீட்டிற்குள் அடைத்து வைத்தாள்; உடலின் கூட்டுக்குள் அடங்காத உணர்வு பறந்து போயிற்று, தான் கண்ட உத்தமனைத் தேடி! மனம் மாறனிடம்! உடலோ வீட்டிற்குள்!! மங்கையின் உடம்பு மெலிந்தது. இந்நிலையில், அடுத்த வீட்டுப் பெண்டிர் தங்கள் காதலரின் பெயர், திறம் ஆகியவற்

(13-ம் பக்கம் பார்க்க)



# நாட்டுப் பிரிவினை—அடுத்த கட்டம்!

## "தமிழ் முரசு" நிருபரின் படப்பிடிப்பு!

திராவிட நாடு 'கூச்சல்' இங்கு—தமிழ் நாட்டில்தானே இருக்கிறது, அதை ஆந்திரர்கள் ஆதரிக்கிறார்களா, கேரளத்தார் கேட்கிறார்களா, கன்னடர்கள் அதுபற்றிக் கவலைப்படுகிறார்களா என்று 'திராவிட நாடு' எதிர்ப்பாளர்கள் கேட்பதுண்டு. ஆனால் தெற்கு வஞ்சிக்கப்படுகிறது, டில்லியின் ஆதிக்கம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது என்ற எண்ணம் தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல், தென்னகத்தின் பிற மாநிலத்தாரிடையேயும் தோன்றி, வளர்ந்து வருகிறது என்பதற்குச் சாட்சி கூறும் முறையில் இரு வாரங்களுக்கு முன் சென்னை வந்திருந்த ஆந்திரமுதலமைச்சர் திரு சஞ்சீவி ரெட்டி டில்லியின் அர்த்தமற்ற—அளவுக்கு மீறிய ஆதிக்கப்போக்கினைக் கடுஞ் சொற்களால் கண்டித்துப் பேசினார். அதுமட்டுமல்ல, 'தெற்கு மாநிலங்கள் ஒற்றுமையாய் இருக்கவேண்டும். ஒன்று சேர்ந்து டில்லியுடன் போராட வேண்டும்' என்றுகூட வேண்டுகோள் விடுத்தார்!

தென்னகம்—திராவிடம் ஒன்றுபடவேண்டும் என்ற வேண்டுகோளும், டில்லியின்மீது கடுந்தாக்குதலும் ஒரு தென்மண்டலக் குழுவிலோ, அல்லது அதுபோன்று மந்திரிகள் தரப்பில் அமைந்த ஒரு கமிட்டிக்குள்ளாகவோ நடந்திருந்தால் விஷயம் வெளியில் வராமலே போயிருக்கக்கூடும். அப்படியே வெளியில் தெரிந்தாலும் 'சரி, டில்லியிடம் தாங்கள் படும் தொல்லைகளை ஒருவருக்கொருவர் சொல்லி ஆறுதல் அடைந்தார்கள் போலும்' என்று பலரும் நினைத்திருப்பார்கள். ஆனால், அவ்வாறில்லாமல் ஆந்திர முதன் மந்திரி சஞ்சீவி ரெட்டி அவர்கள் பொது மக்கள் முன்னிலையில் பகிரங்க மேடையில்தான், அவ்வாறு பேசினார். அதுவும் எத்தகைய சூழ்நிலையில்? வடக்கு வஞ்சிக்கிறது என்பதையே எந்நேரமும் கூறி வரும் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த மேயர் திரு. அ. பொ. அரசு ஒரு பக்கமும் வடக்கு வாழ்கிறது-தெற்குத் தேய்கிறது என்பதெல்லாம் தி. மு. க. வின் கற்பனை, கட்டுக்கதை என்று பேசிவரும் காங்கிரஸ் முதலமைச்சர் காமராஜ் அவர்கள் மற்றொரு பக்கமும் வீற்றிருந்த அத்தகைய மேடையில்தான் பேசினார் சஞ்சீவி ரெட்டி!

சென்னை நகரசபையின் ஆண்டு விழாவிற்குத் தலைமைவகித்த ஆந்திர முதன் மந்திரி, 'சென்னை, ஆந்திரம், மைசூர், கேரளம் ஆகிய நான்கு தெற்கு மாநிலங்களும் ஒன்றோடு ஒன்று சேர்ந்து, முக்கிய பிரச்சினைகளில் கைகோர்த்துக் காரியமாற்றவேண்டும்; அப்படிச் செய்தால் தெற்கு மாநிலங்களுக்குப் பொதுவான பிரச்சினைகளை மத்திய அரசாங்கத்திடம் பலமாக வற்புறுத்தி, காரியம் சாதிக்க முடியும். நான்கு தெற்கு மாநிலங்களும் தனித் தனியே சிறியனவாக இருப்பினும் பரஸ்பரம் அடிக்கடி ஒத்த பிரச்சினைகளில் கலந்துபேசி, ஒன்றாக இணைந்து பாடுபட்டால் பல துறைகளிலும் ஒருவருக்கொருவர் உறுதுணையாக இயங்கி, விரைவில் முன்னேற வழி இருக்கிறது' என்று பேசியதாகத்தான் பத்திரிகைகளில் செய்தி வெளியாயிற்று. அதுகூட ஓரிரு பத்திரிகைகளில்தான். மற்றவை 'இருட்டடிப்பு'ச் செய்துவிட்டன. ஆனால் அவர் அந்த அளவோடு நிற்கவில்லை. இதே பாணியில்—டில்லி ஆதிக்கத்தை எதிர்க்கத் தெற்கு மாநிலங்கள் ஒன்றுசேரவேண்டிய அவசியத்தை வலியுறுத்தி மேலும் பலவாறு பேசினார் என்பதற்கு ஓர் அடையாளம், அவர் பேசியபோது அங்கு கூடியிருந்த திரளான மக்கள் (பெரிதும் தி. மு. க. வினர் அல்லது அவர்களது ஆதரவாளர்கள்) அடிக்கடி கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்ததாகும்.

நகரசபையில் ஆளும் கட்சியான தி. மு. க.வைத் திருப்திசெய்யவே அவர் அவ்வாறு பேசினார் என நினைக்கின்றனர் சிலர்; அது தவறு. திரு. சஞ்சீவி ரெட்டியை அவ்வளவு சாதாரணமாக மதிப்பிடுவது சரியன்று. தமக்கு ஒவ்வாத கருத்தைப் பிறர் திருப்திக்காக வெளியிடும் மனிதரல்லர். அவர் தம் உள்ளத்தில் குமுறிக்கொண்டிருந்த ஓர் எண்ணத்தை வெளியே கொட்ட, அங்கு தி. மு. க. வினர் இருந்தது அவருக்கு ஒரு தூண்டுகோலாக — நினைவூட்டும் சாதனமாக வேண்டுமானால் அமைந்திருக்கக் கூடும்.

திரு சஞ்சீவி ரெட்டி, தமக்கே உரிய அந்தப் பண்பிற்கிணங்க, தம் மனத்தில் பட்டதையெல்லாம் அன்று பேசினார் என்றுதான் சொல்லவேண்டும்.

அடுத்து, டில்லியின் பாரபட்சப் போக்குப்பற்றி ஆந்திர முதலமைச்சர் எவ்வளவு மனக்கொதிப்பும் வேதனையும் அடைந்திருக்கிறார் என்பது சென்னையில் நடந்த மற்றும் ஒரு நிகழ்ச்சியின்போது தெள்ளத் தெளிவாக வெளியாயிற்று. நகரசபை விழாவுக்குத் தலைமை தாங்கிய மறுநாளே பிராந்தியக் கால்நடைக் கண்காட்சியின் பரிசளிப்பு விழாவில் அவர் பேசினார். அங்குதான், நகரசபை விழாவில் பேசியதைவிட அதிகமாக மனத்தில் உள்ளதையெல்லாம் கொட்டினார்.

அவர் என்ன பேசினார் என்பதைச் சொல்வதற்கு முன், அவர் பேச்சுக்கு அடிப்படையாக இருந்த உணவு மண்டலம் பற்றி ஒரு சிறு விளக்கம் தந்துவிடுகிறேன். இங்கு இப்போது ஆந்திரா, சென்னை, மைசூர், கேரளம் ஆகிய நான்கு தென் மாநிலங்களையும் ஒன்று சேர்த்துத் தெற்கு உணவுமண்டலம் என்று செய்திருக்கிறார்கள். இந்த மண்டலத்திற்குள் நெல்லும் அரிசியும் எங்கிருந்தும், எந்த இடத்திற்கும் செல்லலாம். இதனால் என்ன ஆகிறதென்றால் ஆந்திராவும் சென்னையும் உணவில் உபரியாக இருந்தும்கூட அங்கு விலைகள் ஏறுகின்றன. காரணம், பற்றாக்குறை

மாநிலங்களான கேரளாவுக்கும், மைசூருக்கும் தானியங்கள் செல்வதே. தனிப்பட்ட வியாபாரிகள் நிறைய விலைகொடுத்து வாங்கிக் கொண்டுபோய், அதைவிட அதிக விலைக்கு விற்கிருர்கள். இதைக் கட்டுப்படுத்த முடியவில்லை, ஒரே உணவு மண்டலத்தில் இருப்பதால். எனவே ஆந்திராவும் சென்னையும் என்ன சொல்கின்றன என்றுல், 'எங்களைத் தனித்தனியே பிரித்துவிடுங்கள், கேரளத்திற்கும் மைசூருக்கும் நாங்களே (மாநில அரசாங்கமே) மொத்தமாக ஒரு இலட்சம் டன் இரண்டு இலட்சம் டன் என்று தானியம் தருகிறேம்' என்று கூறுகின்றன.

இதை இவர்களிடம் வாங்குவானேன்? அவர்களிடம் கொடுப்பானேன்? இந்தத் தொல்லையெல்லாம் நமக்கெதற்கு என்ற முறையில் மத்திய அரசாங்கம் 'உங்களுக்குள் எப்படியாவது வெட்டி மடியுங்கள்' என்ற பாவனையில், உணவு மண்டலத்தைப் பிரிக்க மறுக்கிறது. டில்லியின் இந்தப் பிடிவாதப் போக்கைத்தான் ஆந்திர முதன் மந்திரி மிகமிக வன்மையாகக் கண்டித்துப் பேசினுர். 'எங்கள் மாநிலங்களின் பிரச்சினைகள் எங்களுக்குத்தானே தெரியும்? எங்கோ வெகுதூரத்தில் [டில்லியில்] உயரத்தில் உட்கார்ந்து கொண்டு, இல்லை, இப்படித்தான் நடக்க வேண்டும், என்று கூறினுல், எங்களைவிட அவர்களுக்கு அதிக அக்கறை இருப்பதாக அர்த்தமாகிவிடுமா?" என்று கேட்டார். அதுமட்டுமா கேட்டார்? 'ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், பம்பாய் ஆகிய மாநிலங்கள் ஒரே உணவுமண்டலமாக இருந்ததைப் பிரிக்க ஒப்புக்கொண்டீர்களே, அதேபோல் நாங்களும் (ஆந்திராவும் சென்னையும்) தனித்தனியே பிரிய ஏன் அனுமதிக்கக்கூடாது? இல்லை, மண்டலமாகச் சேர்ந்திருப்பதுதான் நல்லது என்றுல், மற்ற மாநிலங்களையும் அப்படிச் சேருங்கள். அதைச் செய்யாமல் தெற்குக்கு மட்டும் இந்த முறை ஏன்?' என்று ஆவேசமாகக்கேட்ட அவர், 'தெற்கின் குரல் டில்லியின் காதுகளுக்கு எட்டாதது வருந்தத்தக்கது' என்றும் குறிப்பிட்டார். அதேபோல் தென்னுட்டில் சர்க்கரை விலை ஏற்றத்தைப்பற்றிக் குறிப்பிடுகையில்; வடக்கு மாநிலங்கள் ஒவ்வொன்றும் சர்க்கரை விஷயத்தில் தனித்தனி மண்டலங்களாக இயங்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றன என்றும், அதே நேரத்தில் தெற்கு மாநிலங்களை எல்லாம் ஆடுமாடுகளை ஒரே கொட்டகையில் அடைப்பதுபோல் ஒன்ருகச் சேர்த்து வைத்திருக்கிருர்கள்' என்றும் கூறி ஒவ்வொன்றிலும் இந்த [வடக்கு—தெற்கு] பேதம் ஏன் என்று, எத்தனையோ கேள்விகளைப் போட்டுப்பற்பல விதமாகக் கேட்டார்!

அவ்வளவுதான் அவர் பேச முடியும்! டில்லியில் இருப்பது காங்கிரஸ் அரசாங்கம். திரு. சஞ்சீவ ரெட்டியும் ஒரு (மாநில) காங்கிரஸ் அரசாங்கத்தின் தலைவர். தெற்குக்கு மட்டும் தனி நியாயமா என்று கேட்டால், வடக்கிற்கு வேறு நியாயமா என்ற கேள்வியும் தொக்கி நிற்கிறது. அதை அவர் வாய்விட்டுச் சொல்லவில்லை. "வடக்கு" என்பதற்குப் பதில் "மற்ற மாநிலங்கள" என்கிருர். அதுதான் வித்தியாசம், தெற்கின் குரல் டில்லிக்குக் கேட்கவில்லை என்று சொல்லுகின்ற அவர் "அது வருந்தத் தக்கது" என்கிருர். குடும்பப் பாசம் (கட்சிப்பற்று) அந்த அளவோடு அவரை நிற்கச் செய்கிறது, ஆனுல் தலைவனின் பிடிவாதப் போக்கு — பாரபட்சமான நடத்தை நீடிக்குமானுல், அடுத்தது நாட்டுப் பிரிவினைக்குத் துணிவதுதான்! அத்தகைய நிலைமை எதிர் காலத்தில் குறிப்பாக நேருவுக்குப் பின்—ஏற்படக்கூடும் என்பதை எச்சரிப்பதுதான் ஆந்திர முதன் மந்திரியின் பேச்சு என இங்கு கருதப்படுகிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவரான திரு. அண்ணுத்துரை அவர்கள் அந்த நிலைமை உருவாகியே தீரும் என்று எண்ணுகிருர். திராவிட நாடு பெறமுடியும் என்று அவர் திடமாகக் கூறுவதும் அந்த நம்பிக்கையில்தான். அதாவது தமது திராவிட முன்னேற்றக்கழகமே—அதுமட்டுமே—திராவிட நாட்டைப்பெறவேண்டும்; அதன் மூலம் தமிழகத்திற்கே முழுப்புகழும் கிடைக்கவேண்டும் என்று அவர் ஆசைப்படவுமில்லை, தமிழ்நாட்டில் மட்டும் இயங்கும் தமது கட்சி மட்டுமே திராவிட நாட்டைப் பெற்றுவிடும் எனவும் அவர் நம்பிக்கொண்டிருக்கவில்லை. ஆனுல் ஆந்திர முதன் மந்திரியைப் போன்று, மற்ற தெற்கு மாநிலத்தவரும் வடக்கின் ஓரவஞ்சனையை உணரும்படி செய்வதே தம் கழகத்தின் பணி; அதுதான் கழகம் செய்யக்கூடிய மாபெரும் சாதனையென திரு. அண்ணுத்துரை அவர்கள் கருதுகிருர்கள். இதுதான் உண்மையான நிலைமை. இதைப் புரிந்துகொள்ளாதவர்கள்தான் "இந்த தி. மு. க.க்கள் திராவிட நாட்டை வாங்கிவிடுமா?" என்று கேலி பேசுகின்றனர்.

காமராஜ்கூட "நாடு பிரிவினை மூலந்தான் நம் (தமிழ்) மக்களுக்கு நல்வாழ்வு கிடைக்கும் என்றுல், அப்படித் தனிநாடு கேட்பதில் நான்தான் முதல் ஆளாக இருப்பேன்! என்று பேச்சோடு பேச்சாக இப்போதே சொல்லிவைத்திருக்கிருர் என்றுல், ஆச்சரியமாயிருக்கும். அவர் பேசியிருக்கிருர் — பகிரங்கமாகப் பொதுக்கூட்டம் ஒன்றில்! ஆனுல் எப்படி? இந்தப் பக்கம் அந்தப் பக்கம் அணை போட்டுக் கொண்டு சொன்ன வார்த்தை இது. அதாவது நாடு பிரிவினை கேட்கின்ற நிலைமை வரவே வராது என்ற முழு நம்பிக்கையை மக்களிடையே உண்டாக்கவே அவர் அவ்வாறு பேசியதாகத் தெரிகிறது, இல்லாவிடில் காமராஜாவாவது, நான் முதல் ஆள் என்று சொல்வதாவது?

ஆனுல், காமராஜ் வாயால் தனிநாடு கேட்கும் அந்த அரிய காட்சியைக் காண முடியாதா என்று தி. மு. க.வினர் ஆவல் கொண்டால்; அதில் வியப்பில்லை.

★

குறிப்பு:— டில்லி, தன் போக்கை எதிர்ப்பவர்களை அடக்கவும், கண்டிப்பவர்களைக் கண்சாடையால் அழைத்துத் தனது ஆசனங்களில் அமர்த்தவுமான வழக்கமாகக் கையாளும் முறையைத் தற்சமயம் டில்லியின் போக்கைக் கண்டிக்கும் ஆந்திர முதலமைச்சர் மீதும் காட்டுகின்றது. "காங்கிரசுக் கட்சியின் தலைவர் நீர்தான்" என்று கூறுகின்றது. அப்படியொரு பெரும் பொறுப்பை — காங்கிரசுக்கு எதிராக எதுவும் பேசமுடியாத நிலையை உண்டாக்கிவிட்டால், அவர் வாயடைத்துக் கிடப்பார் என்பது டில்லியின் எண்ணம்.

ஆ—ர்.

# ★ பாராமுகம்! ★

—(ச. வெ. பாண்டியன்)—

"வெளிநாட்டிலிருந்து விரட்டியடிக்கப்படுகிற தமிழக—தென்னக அகதிகளுக்கு மத்திய சர்க்கார் உதவிசெய்து அவர்களுக்கு மறுவாழ்வு அளிக்கவேண்டும்" என்ற முறையில் "விருதுநகர்" நகரசபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதைப் பின்பற்றி "சிவகாசி" நகரசபையிலும் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. தமிழகத்தின் குரலை எதிரொலித்த இவ்விரண்டு நகரசபைகளும் நமது பாராட்டுக்குரியனவாகின்றன.

தமிழக நிலையில் அக்கறையுள்ள எவருக்கும் இப்பிரச்சினை "ஒரு தீராப்பிரச்சினை" என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்கமுடியாது. காரணம் இது நம்மவரைப் பாதிக்கும் பெரிய சிக்கலாகும்!

"இலங்கை"யிலிருந்து இலட்சக் கணக்கான மக்கள் விரட்டியடிக்கப்பட்டு இன்று நாடெங்கும், இல்லாதவர்களாக — கஞ்சிக்குக் கதியற்றவர்களாக — அலைந்துகொண்டிருப்பதைநாம் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேம். இன்னும் விரட்டியடிக்கப்பட்டுக்கொண்டும்தான் இருக்கிருர்கள்! "இலங்கை"யிலிருந்துதான் தமிழர்கள்-திராவிடர்கள் ஓட்டப்படுகிருர்கள் என்பது இப்போதில்லை.

"திராவிட இனம்" எங்கெங்கெல்லாம் திரைகடலோடிப் பிழைக்கச் சென்றதோ அங்கெங்கலாம் இதே நிலைதான். சிங்கப்பூர், பர்மாவில் தமிழக வாணிகர்கள் வாழ வழியில்லை. அவர்கள் தொழில் நடத்த வழியின்றி வதைக்கிறது. சாதாரணத் தொழிலாளிகள் மீந்த பணத்தை தாய்நாட்டிற்கு அவரது பிழைப்பையே நம்பியிருக்கும் குடும்பத்திற்கு அனுப்ப வழியில்லை! இருந்தவர்களை எல்லாம் போங்கள் என்று காலால் உதைக்கிறது— அவ்வந்நிய ஆட்சி!

இவர்களின் பொறுப்பைக் கவனிக்க வேண்டிய மத்திய அரசாங்கமோ 'மண்ணுழி மங்கன்' மாதிரி இருக்கிறதேதவிர, கொஞ்சமாவது சூடு, சொரணை இல்லை. இலங்கை, சிங்கப்பூர், பர்மா போன்ற நாடுகளிலெல்லாம் தனது தூதுவர்களை நியமித்திருக்கிறது — இந்திய ஆட்சி. இருந்தும் இவர்களெல்லாம் என்ன செய்கிருர்கள் என்பது நமக்குப் புரியவில்லை!

ஆனுல் அதே சமயத்தில் "பாக்கிஸ்தானி"லிருந்து விரட்டப்படுகிற அகதிகளுக்கு மாத்திரம் மிகவும் அக்கரை காட்டுகிறது— மத்திய ஆட்சி! நாம் அவர்கள்பால் அக்கரை காட்டுவதை வரவேற்கிறேம்! ஆனுல் அதே சமயத்தில் தென்னக மக்கள் உதைத்து அனுப்பப்படும்போது ஏன் அந்த அளவு உணர்ச்சி உண்டாகவில்லை என்பதுதான் நமக்குள்ளவேதனை!

ஆசியாவின் சோதியாம் நேரு அவர்கள் பாக்கிஸ்தான் அகதிகள் என்றதும் ஓடோடிச் சென்று உதவி புரிகிருர்! ஆனுல் தமிழக—தென்னக அகதிகளுக்கு நீங்கள் என்ன செய்தீர்கள் என்று கேட்டால் 'இதை அவர்களே (தமிழக ஆட்சியினர்) கவனித்துக்கொள்வார்கள்? என்று அற்பமானதாகத்தான் நினைத்துப்பேசுகிருரே தவிர, அவர் உள்ளத்தில் வடவர் அகதிகளுக்குக் காட்டும் பாசம்— பற்று—பரிவு—தென்னக மக்கள் மீது உண்டாகவில்லை!

இதற்குக் காரணம் என்ன? ஒரு வீட்டில் ஒருவர் இறந்துவிட்டார் என்றுல், அவ்வீட்டாருக்கு உரிமைப்பட்டோர்தான் உண்மையாக வேதனையுற்று அழுவர். ஆனுல் ஒப்புக்கு வந்து மாரடித்து அழுபவளை என் செய்வது? மாரடித்து அழுதவள் அப்பாலே சென்றதும் மகிழ்ச்சியோடுதான் செல்வாள். இதேபோல்தான் வடவர்களும் ஒப்புக்கு மாரடிக்கிருர்கள்!

"இந்தியா ஒன்று. இதை யாராலும் பிரிக்க முடியாது" என்று இமயமலையில் நின்று ஆர்ப்பரிக்கின்றநேரு அவர்களுக்கு "தென்ன" வர்களும் மனிதர்களாகப்பட்டவில்லை என்றுல்—தென்னக மக்கள் விரட்டப்படுவது கண்டு வேதனையுறவில்லை என்றுல், என்ன பொருள்? அவர் "இருதயம்" படைத்தவர்தாஞ என்பதைத்தானே இது காட்டுகிறது!

தன்னவர் என்றதும் துடிக்கிருர்! துவழ்கிருர்! தென்னவர் என்றதும் திரும்பிக் கொள்கிருர்!

"இந்த இருவேறு நிலைக்குக் காரணம், அவர்கள் வேறு, நாம் வேறு! மாறுபட்டவர்களாலே எப்படி மனமொத்த வாழ்க்கை இருக்க முடியும். இருமுகங்காட்டும் நேருவும் அப்படித்தான்—அவர் சார்ந்திருக்கிற காங்கிரசும் அப்படித்தான்" என்று தி. மு. கழகம் பல்லாண்டுகளாகவே பேசி வருகிறது.

பேரூரோ— சிற்றூரோ—பேசிடும் கூட்டங்களிலெல்லாம், கூட்டப்படுகின்ற மாவட்ட—மாநில—மாநாடுகளிலெல்லாம் நாம் பேசாத நாளில்லை. நிறைவேற்றியனுப்பப்பட்ட தீர்மானங்கள் ஏராளம்!

சிலர் "இவர்கள் ஒரு கட்சியல்லவா? ஏதாவது பேசவேண்டும். எனவே பேசுகிருர்கள்" என்று தங்கள் அதிமேதாவிதனத்தைக் காட்டிக் கொண்டார்கள். மற்றும் "அகில இந்தியாவிற்கு" வால்பிடிக்கும் சிலர் இதெல்லாம் பித்தலாட்டம். வடக்காவது — தெற்காவது! எல்லாம் ஒன்றுதான்! எந்த அகதிகளுக்கு உதவி செய்தால் என்ன? எல்லாரும் நம்மவர்கள்தானே" என்று பேசுகிருர்கள்!

மத்திய ஆட்சியாளரைத் தட்டிக் கேட்கவேண்டிய நமது அமைச்சர்களோ — கேட்கவே பயப்படுகிருர்கள். இலட்சக்கணக்காக ஓடிவரும் அகதிகளுக்கு உதவ மான்யம் தாருங்கள் என்று மத்திய ஆட்சி

மாநிலங்களான கேரளாவுக்கும், மைசூருக்கும் தானியங்கள் செல்வதே. தனிப்பட்ட வியாபாரிகள் நிறைய விலைகொடுத்து வாங்கிக் கொண்டுபோய், அதைவிட அதிக விலைக்கு விற்கிறார்கள். இதைக் கட்டுப்படுத்த முடியவில்லை, ஒரே உணவு மண்டலத்தில் இருப்பதால். எனவே ஆந்திராவும் சென்னையும் என்ன சொல்கின்றன என்றால், 'எங்களைத் தனித்தனியே பிரித்துவிடுங்கள், கேரளத்திற்கும் மைசூருக்கும் நாங்களே (மாநில அரசாங்கமே) மொத்தமாக ஒரு இலட்சம் டன் இரண்டு இலட்சம் டன் என்று தானியம் தருகிறோம்' என்று கூறுகின்றன.

இதை இவர்களிடம் வாங்குவானேன்? அவர்களிடம் கொடுப்பானேன்? இந்தத் தொல்லையெல்லாம் நமக்கெதற்கு என்ற முறையில் மத்திய அரசாங்கம் 'உங்களுக்குள் எப்படியாவது வெட்டி மடியுங்கள்' என்ற பாவனையில், உணவு மண்டலத்தைப் பிரிக்க மறுக்கிறது. டில்லியின் இந்தப் பிடிவாதப் போக்கைத்தான் ஆந்திர முதன் மந்திரி மிகமிக வன்மையாகக் கண்டித்துப் பேசினார். 'எங்கள் மாநிலங்களின் பிரச்சினைகள் எங்களுக்குத்தானே தெரியும்? எங்கோ வெகுதூரத்தில் [டில்லியில்] உயரத்தில் உட்கார்ந்து கொண்டு, இல்லை, இப்படித்தான் நடக்க வேண்டும், என்று கூறினால், எங்களைவிட அவர்களுக்கு அதிக அக்கறை இருப்பதாக அர்த்தமாகிவிடுமா?'' என்று கேட்டார். அதுமட்டுமா கேட்டார்? 'ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், பம்பாய் ஆகிய மாநிலங்கள் ஒரே உணவுமண்டலமாக இருந்ததைப் பிரிக்க ஒப்புக்கொண்டீர்களே, அதேபோல் நாங்களும் (ஆந்திராவும் சென்னையும்) தனித்தனியே பிரிய ஏன் அனுமதிக்கக்கூடாது? இல்லை, மண்டலமாகச் சேர்ந்திருப்பதுதான் நல்லது என்றால், மற்ற மாநிலங்களையும் அப்படிச் சேருங்கள். அதைச் செய்யாமல் தெற்குக்கு மட்டும் இந்த முறை ஏன்?' என்று ஆவேசமாகக்கேட்ட அவர், 'தெற்கின் குரல் டில்லியின் காதுகளுக்கு எட்டாதது வருந்தத்தக்கது' என்றும் குறிப்பிட்டார். அதேபோல் தென்னாட்டில் சர்க்கரை விலை ஏற்றத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில்; வடக்கு மாநிலங்கள் ஒவ்வொன்றும் சர்க்கரை விஷயத்தில் தனித்தனி மண்டலங்களாக இயங்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றன என்றும், அதே நேரத்தில் தெற்கு மாநிலங்களை எல்லாம் ஆடுமாடுகளை ஒரே கொட்டகையில் அடைப்பதுபோல் ஒன்றுகச் சேர்த்து வைத்திருக்கிறார்கள்' என்றும் கூறி ஒவ்வொன்றிலும் இந்த [வடக்கு—தெற்கு] பேதம் ஏன் என்று, எத்தனையோ கேள்விகளைப் போட்டுப் பற்பல விதமாகக் கேட்டார்!

அவ்வளவுதான் அவர் பேச முடியும்! டில்லியில் இருப்பது காங்கிரஸ் அரசாங்கம். திரு. சஞ்சீவ ரெட்டியும் ஒரு (மாநில) காங்கிரஸ் அரசாங்கத்தின் தலைவர். தெற்குக்கு மட்டும் தனி நியாயமா என்று கேட்டால், வடக்கிற்கு வேறு நியாயமா என்ற கேள்வியும் தொக்கி நிற்கிறது. அதை அவர் வாய்விட்டுச் சொல்லவில்லை. "வடக்கு'' என்பதற்குப் பதில் "மற்ற மாநிலங்கள்'' என்கிறார். அதுதான் வித்தியாசம், தெற்கின் குரல் டில்லிக்குக் கேட்கவில்லை என்று சொல்லுகின்ற அவர் "அது வருந்தத் தக்கது'' என்கிறார். குடும்பப் பாசம் (கட்சிப்பற்று) அந்த அளவோடு அவரை நிற்கச் செய்கிறது, ஆனால் தலைவனின் பிடிவாதப் போக்கு — பாரபட்சமான நடத்தை நீடிக்குமானால், அடுத்தது நாட்டுப் பிரிவினைக்குத் துணிவதுதான்! அத்தகைய நிலைமை எதிர் காலத்தில் குறிப்பாக நேருவுக்குப் பின்—ஏற்படக்கூடும் என்பதை எச்சரிப்பதுதான் ஆந்திர முதன் மந்திரியின் பேச்சு என இங்கு கருதப்படுகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவரான திரு. அண்ணாத்துரை அவர்கள் அந்த நிலைமை உருவாகியே தீரும் என்று எண்ணுகிறார். திராவிட நாடு பெறமுடியும் என்று அவர் திடமாகக் கூறுவதும் அந்த நம்பிக்கையில்தான். அதாவது தமது திராவிட முன்னேற்றக்கழகமே—அதுமட்டுமே—திராவிட நாட்டைப்பெறவேண்டும்; அதன் மூலம் தமிழகத்திற்கே முழுப்புகழும் கிடைக்கவேண்டும் என்று அவர் ஆசைப்படவுமில்லை, தமிழ்நாட்டில் மட்டும் இயங்கும் தமது கட்சி மட்டுமே திராவிட நாட்டைப் பெற்றுவிடும் எனவும் அவர் நம்பிக்கொண்டிருக்கவில்லை. ஆனால் ஆந்திர முதன் மந்திரியைப் போன்று, மற்ற தெற்கு மாநிலத்தவரும் வடக்கின் ஓரவஞ்சனையை உணரும்படி செய்வதே தம் கழகத்தின் பணி; அதுதான் கழகம் செய்யக்கூடிய மாபெரும் சாதனையென திரு. அண்ணாத்துரை அவர்கள் கருதுகிறார்கள். இதுதான் உண்மையான நிலைமை. இதைப் புரிந்துகொள்ளாதவர்கள் தான் "இந்த தி. மு. க.க்கள் திராவிட நாட்டை வாங்கிவிடுமா?'' என்று கேலி பேசுகின்றனர்.

காமராஜ்கூட "நாடு பிரிவினை மூலம்தான் நம் (தமிழ்) மக்களுக்கு நல்வாழ்வு கிடைக்கும் என்றால், அப்படித் தனிநாடு கேட்பதில் நான்தான் முதல் ஆளாக இருப்பேன்! என்று பேச்சோடு பேச்சாக இப்போதே சொல்லிவைத்திருக்கிறார் என்றால், ஆச்சரியமாயிருக்கும். அவர் பேசியிருக்கிறார் — பகிரங்கமாகப் பொதுக்கூட்டம் ஒன்றில்! ஆனால் எப்படி? இந்தப் பக்கம் அந்தப் பக்கம் அணை போட்டுக் கொண்டு சொன்ன வார்த்தை இது. அதாவது நாடு பிரிவினை கேட்கின்ற நிலைமை வரவே வராது என்ற முழு நம்பிக்கையை மக்களிடையே உண்டாக்கவே அவர் அவ்வாறு பேசியதாகத் தெரிகிறது. இல்லாவிடில் காமராஜாவாவது, நான் முதல் ஆள் என்று சொல்வதாவது?

ஆனால், காமராஜ் வாயால் தனிநாடு கேட்கும் அந்த அரிய காட்சியைக் காண முடியாதா என்று தி. மு. க.வினர் ஆவல் கொண்டால்; அதில் வியப்பில்லை.

★

குறிப்பு:— டில்லி, தன் போக்கை எதிர்ப்பவர்களை அடக்கவும், கண்டிப்பவர்களைக் கண்சாடையால் அழைத்துத் தனது ஆசனங்களில் அமர்த்தவுமான வழக்கமாகக் கையாளும் முறையைத் தற்சமயம் டில்லியின் போக்கைக் கண்டிக்கும் ஆந்திர முதலமைச்சர் மீதும் காட்டுகின்றது. "காங்கிரசுக் கட்சியின் தலைவர் நீர்தான்'' என்று கூறுகின்றது. அப்படியொரு பெரும் பொறுப்பை — காங்கிரசுக்கு எதிராக எதுவும் பேச முடியாத நிலையை உண்டாக்கி விட்டால், அவர் வாயடைத்துக் கிடப்பார் என்பது டில்லியின் எண்ணம்.

ஆ—ர்.

# ★ பாராமுகம்! ★

—(ச. வெ. பாண்டியன்)—

"வெளிநாட்டிலிருந்து விரட்டியடிக்கப்படுகிற தமிழக—தென்னக அகதிகளுக்கு மத்திய சர்க்கார் உதவிசெய்து அவர்களுக்கு மறுவாழ்வு அளிக்கவேண்டும்'' என்ற முறையில் "விருதுநகர்'' நகரசபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதைப் பின்பற்றி "சிவகாசி'' நகரசபையிலும் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. தமிழகத்தின் குரலை எதிரொலித்த இவ்விரண்டு நகரசபைகளும் நமது பாராட்டுக்குரியனவாகின்றன.

தமிழக நிலையில் அக்கறையுள்ள எவருக்கும் இப்பிரச்சினை "ஒரு நீராப்பிரச்சினை'' என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்கமுடியாது. காரணம் இது நம்மவரைப் பாதிக்கும் பெரிய சிக்கலாகும்!

"இலங்கை''யிலிருந்து இலட்சக் கணக்கான மக்கள் விரட்டியடிக்கப்பட்டு இன்று நாடெங்கும், இல்லாதவர்களாக — கஞ்சிக்குக் கதியற்றவர்களாக —அலைந்துகொண்டிருப்பதைநாம் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறோம். இன்னும் விரட்டியடிக்கப்பட்டுக்கொண்டும் தான் இருக்கிறார்கள்! "இலங்கை''யிலிருந்துதான் தமிழர்கள்-திராவிடர்கள் ஒட்டப்படுகிறார்கள் என்பது இப்போதில்லை.

"திராவிட இனம்'' எங்கெங்கெல்லாம் திரைகடலோடிப் பிழைக்கச் சென்றதோ அங்கெங்கலாம் இதே நிலைதான். சிங்கப்பூர், பர்மாவில் தமிழக வாணிகர்கள் வாழ வழியில்லை. அவர்கள் தொழில் நடத்த வழியின்றி வதைக்கிறது. சாதாரணத் தொழிலாளிகள் மீதும் பணத்தை தாய்நாட்டிற்கு அவரது பிழைப்பையே நம்பியிருக்கும் குடும்பத்திற்கு அனுப்ப வழியில்லை! இருந்தவர்களை எல்லாம் போங்கள் என்று காலால் உதைக்கிறது—அவ்வங்கிய ஆட்சி!

இவர்களின் பொறுப்பைக் கவனிக்க வேண்டிய மத்திய அரசாங்கமோ 'மண்ணுழி மங்கன்'' மாதிரி இருக்கிறதேதவிர, கொஞ்சமாவது சூடு, சொரணை இல்லை. இலங்கை, சிங்கப்பூர், பர்மா போன்ற நாடுகளிலெல்லாம் தனது தூதுவர்களை நியமித்திருக்கிறது — இந்திய ஆட்சி. இருந்தும் இவர்களெல்லாம் என்ன செய்கிறார்கள் என்பது நமக்குப் புரியவில்லை!

ஆனால் அதே சமயத்தில் "பாக்கிஸ்தானி''லிருந்து விரட்டப்படுகிற அகதிகளுக்கு மாத்திரம் மிகவும் அக்கறை காட்டுகிறது—மத்திய ஆட்சி! நாம் அவர்கள்பால் அக்கரை காட்டுவதை வரவேற்கிறோம்! ஆனால் அதே சமயத்தில் தென்னக மக்கள் உதைத்து அனுப்பப்படும்போது ஏன் அந்த அளவு உணர்ச்சி உண்டாகவில்லை என்பதுதான் நமக்குள்ளவேதனை!

ஆசியாவின் சோதியாம் நேரு அவர்கள் பாக்கிஸ்தான் அகதிகள் என்றதும் ஓடோடிச் சென்று உதவி புரிகிறார்! ஆனால் தமிழக—தென்னக அகதிகளுக்கு நீங்கள் என்ன செய்தீர்கள் என்று கேட்டால் 'இதை அவர்களே (தமிழக ஆட்சியினர்) கவனித்துக்கொள்வார்கள்? என்று அற்பமானதாகத்தான் நினைத்துப்பேசுகிறாரே தவிர, அவர் உள்ளத்தில் வடவர் அகதிகளுக்குக் காட்டும் பாசம்—பற்று—பரிவு—தென்னக மக்கள் மீது உண்டாகவில்லை!

இதற்குக் காரணம் என்ன? ஒரு வீட்டில் ஒருவர் இறந்துவிட்டார் என்றால், அவ்வீட்டாருக்கு உரிமைப்பட்டோர்தான் உண்மையாக வேதனையுற்று அழுவர். ஆனால் ஒப்புக்கு வந்து மாரடித்து அழுபவளை என் செய்வது? மாரடித்து அழுதவள் அப்பாலே சென்றதும் மகிழ்ச்சியோடுதான் செல்வாள். இதேபோல்தான் வடவர்களும் ஒப்புக்கு மாரடிக்கிறார்கள்!

"இந்தியா ஒன்று. இதை யாராலும் பிரிக்க முடியாது'' என்று இமய மலையில் நின்று ஆர்ப்பரிக்கின்ற நேரு அவர்களுக்கு "தென்னவர்''களும் மனிதர்களாகப்படவில்லை என்றால்—தென்னக மக்கள் விரட்டப்படுவது கண்டு வேதனையுறவில்லை என்றால், என்ன பொருள்? அவர் "இருதயம்'' படைத்தவர் தானா என்பதைத்தானே இது காட்டுகிறது!

தன்னவர் என்றதும் துடிக்கிறார்! துவழ்கிறார்! தென்னவர் என்றதும் திரும்பிக் கொள்கிறார்!

"இந்த இருவேறு நிலைக்குக் காரணம், அவர்கள் வேறு, நாம் வேறு! மாறுபட்டவர்களாலே எப்படி மனமொத்த வாழ்க்கை இருக்க முடியும். இருமுகங்காட்டும் நேருவும் அப்படித்தான்—அவர் சார்ந்திருக்கிற காங்கிரசும் அப்படித்தான்'' என்று தி. மு. கழகம் பல்லாண்டுகளாகவே பேசி வருகிறது.

பேரூரோ— சிற்றூரோ—பேசிடும் கூட்டங்களிலெல்லாம், கூட்டப்படுகின்ற மாவட்ட—மாநில—மாநாடுகளிலெல்லாம் நாம் பேசாத நாளில்லை. நிறைவேற்றியனுப்பப்பட்ட தீர்மானங்கள் ஏராளம்!

சிலர் "இவர்கள் ஒரு கட்சியல்லவா? ஏதாவது பேசவேண்டும். எனவே பேசுகிறார்கள்'' என்று தங்கள் அதிமேதாவிதனத்தைக் காட்டிக் கொண்டார்கள். மற்றும் "அகில இந்தியாவிற்கு'' வால்பிடிக்கும் சிலர் இதெல்லாம் பித்தலாட்டம். வடக்காவது — தெற்காவது! எல்லாம் ஒன்றுதான்! எந்த அகதிகளுக்கு உதவி செய்தால் என்ன? எல்லாரும் நம்மவர்கள்தானே'' என்று பேசுகிறார்கள்!

மத்திய ஆட்சியாளரைத் தட்டிக் கேட்கவேண்டிய நமது அமைச்சர்களோ — கேட்கவே பயப்படுகிறார்கள். இலட்சக்கணக்காக ஓடிவரும் அகதிகளுக்கு உதவ மான்யம் தாருங்கள் என்று மத்திய ஆட்சி

யாளரை அதட்டிக் கேட்க மனமின்றி "நூற்பாலை ஒன்று" கட்டியிருக்கிறோம் என்று பேசுகிறார்கள்!

ஆளுக்கொரு விதமாகப் பேசிக்கொள்கிறார்களே தவிர, பிரச்சினை ஓயவில்லை! விரட்டப்படுவோர் தொகை நாளும், நாளும் பெருகிக் கொண்டுதான் வருகிறது, தெருத் தெருவாய் அலைவோர் தொகையும் மிகுந்துகொண்டுதான் வருகிறது. பெருகிவரும் இக்கூட்டத்தினருக்கு மனித இதயம்கொண்டு — அனுதாபத்துடன் அவர்களது பிரச்சினையைக் கவனிக்காது, கட்சிமாச்சரியங்களும் வீண் பேச்சும்தான் பேசி வருகின்றனர்!

"நமக்கு நாமே" இப்படித்தான் வெற்றுரை சிந்திக்கொண்டலைகிறோமே தவிர, வடவர் ஆட்சி, வடவர் அகதிகளுக்கு இன்று வரை அள்ளி, அள்ளிக்கொடுத்து உதவிவருகிறது — கோடி கோடியாகக் கொட்டிவருகிறது பணத்தை! அவர்களுக்கு இருக்க இடம், தொழில் நடத்தப் பணம்; இலவசமாக வீடு......இப்படி எல்லாம் கொடுத்து உதவுகிறது டெல்லி!

வடக்கு என்பதனால் இப்படிப் பேசுகிறார்கள் — எழுதுகிறார்கள் என்பவர்கள் கவனத்திற்கு கீழே காணும் விபரத்தை முன்வைக்கிறோம்.

குறிப்பாகக் கூறினாலும் 330-கோடி ரூபாய் இதுவரை செலவழித்திருக்கிறது டில்லி. கி. பாகிஸ்தான், மே. பாகிஸ்தான் ஆகிய இடங்களிலிருந்து வந்திருக்கிற மக்கள் மொத்தம் 88,57,000! 88½-இலட்சம் மக்களுக்குச்செலவழித்த பணம் 330-கோடி ரூபாய்!

தொழில் நகரமாம் "பம்பாயின்" மக்கள் தொகை 48205221. கிட்டத்தட்ட நலேமுக்கால் கோடி பேர். அவர்களுக்காக அவ்வாட்சியினர் செலவழிப்பது (1958—'59 நிதிநிலை அறிக்கைப்படி) 13158·38 இலட்சமாகும். அதாவது நாலே முக்கால் கோடிபேருக்குச் செலவழிப்பது 131½-கோடி ரூபாய்! ஆனால் 88½-இலட்சம் பேருக்கு 330-கோடி ரூபாய்! மூன்றரை மடங்கு அதிகமாக இப்போதைய "பம்பாய்" இருந்தால் எவ்வளவு பணம் செலவழிக்கப்படுமோ அவ்வளவு பணம் 88½-இலட்சம் மக்களுக்காகச் செலவிடப்படுகிறது.

தென்னக மாநிலங்கள் நான்கின் மக்கள்தொகை கிட்டத்தட்ட 9½ கோடி. இந்நான்கு மாநிலங்களும் செலவிடும் தொகை ('58—'59 நிதிநிலை அறிக்கைப்படி) கிட்டத்தட்ட 232 கோடியாகும். 88½ இலட்சம் மக்களுக்கு 330 கோடி! 9½ கோடி மக்களுக்கு 232 கோடியாகும்!

## வடநாட்டு அகதிகளுக்குச் செலவழித்த தொகை

( கோடிக்கணக்கில் )

| | மேற்குப் பாகிஸ்தானிலிருந்து வந்தவர்களுக்கு | கி. பாகிஸ்தானிலிருந்துவந்தவர்களுக்கு | மொத்தம் |
|---|---|---|---|
| உதவித் தொகை | 85·18 | 69·12 | 154 30 |
| கடன் உதவி | 25 63 | 38·10 | 63 73 |
| வீடு கட்டிக்கொடுத்தல் | 60 98 | 34·70 | 95 68 |
| தொழில் வசதிக்கு | 2 98 | 57 | 2 76 |
| 31—12—58-வரை "மறுவாழ்வு நிதிக்குழுவின்" மூலம் அளித்த கடன். | 7 93 | 4·27 | 4·27 |
| இதர வகைகளில் | 01 | — | 01 |
| தண்டகாருண்யத் திட்டத்திற்கு | — | 1·30 | 1·30 |
| | 181·92 | 148·06 | 329·98 |

குறிப்பு:— இதில் பொதுவாக நட்ட ஈட்டுத்தொகை சேர்க்கப்படவில்லை. 1958—'59-வரை உள்ள "நிதிநிலை" அறிக்கையில் ஒதுக்கப்பட்டுள்ள 29·99-கோடி ரூபாயும், மூலதனமாக உள்ள 8·65-கோடி ரூபாயும் சேர்க்கப்படவில்லை.

ஒன்றேடொன்று ஒப்புக்காட்டியதற்குக் காரணம் எவ்வளவு பணத்தை "டெல்லி" வட அகதிகள்பால் செலவிடுகின்றனர் என்பதைக் காட்டுவதற்குத்தான்!

தென்னகத்திற்கு ஒரு சிறு தொகைகூடத் தரவில்லை மத்திய ஆட்சி! தரவில்லை என்பதுமாத்திரமல்ல—தமிழ்நாடு 9000, ஆந்திரம் 4000, கன்னடம் 7000 — ஆக 20000 வட அகதிகளை வேறு பாதுகாக்கும் பொறுப்பையும் அமர்த்தியிருக்கிறது — டெல்லி ஏகாதிபத்தியம்!

தென்னக அகதிகளுக்கு ஒன்றும் இல்லையாம்! இருபதினாயிரம் வட அகதிகளைப் பராமரிக்கவேண்டுமாம்! "குதிரை கீழே தள்ளியது மட்டுமல்லாமல் குழியும் தோண்டியதாம்" என்று கூறுவது போலல்லவா இருக்கிறது.

"ஏக இந்தியா" கூண்டிற்குள் அடைக்கப்பட்டுள்ள நாம் காணும் வாழ்வு இதுதானே! வடகேயானால் அள்ளிக்குவிக்கிறது — தெற்கேயானால் கையை விரிக்கிறது! இன்னும் நாம் எத்தனை நாளைக்குத்தான் இதைத் தாங்கிக் கொள்வது? எம்மரும் தோழர்கள் —கண்ணீர் விடும் காட்சி மறைவது எப்போது?

வடவரின் பாராமுகத்தைத் தட்டிக் கேட்பது தி. மு. கழகம் மாத்திரம்தான் அள்ளிக் கொடுக்காவிட்டாலும், சேது சமுத்திரத் திட்டத்தை, தூத்துக்குடித்துறைமுகத் திட்டத்தை, தென்பகுதிகளில் தொழிற்சாலைகளையாவது துவக்கி, விரட்டப்பட்டோர்களின் வேதனையைத் துடைக்கலாகாதா என்று பரிவோடு பேசுவதும் தி. மு. க. தான்.

"நாம் சொல்வது நியாயம்! அதிலே உண்மையிருக்கிறது" என்பதை உலகுக்கு எடுத்தோதுவதுபோல் இருக்கிறது அந்த இரு நகராட்சி மன்றங்களின் தீர்மானங்கள்! எனவேதான் வாழ்த்துகிறோம் அவர்களை!

✻



# "ஹானர்டிபால்சாக்!"

[ கி. சோழன் ]

உலக இலக்கியப் பெருமேதைகளில், தனது தணியாத ஆர்வத்தாலும் முயற்சியாலும், தனக்கென ஓர் தனியிடம் தேடிக்கொண்ட பெருமேதை!

"ஹானர்டி பால்சாக்" என்ற அந்த எழுத்தாளனது வாழ்க்கை, விசித்திரமானதும், விபரீதமானதுமாகும்! உலகில் தோன்றிய அத்தனை எழுத்தாளர்களையும் ஆட்டிப்படைத்த வறுமை என்னும் தொத்துநோய் அவரையும் விடாப்பிடியாகத் தொத்திக் கொண்டுதானிருந்தது! ஆனால் அந்த வறுமைதான அவரை எழுத்தாளனாக்கி, உலக இலக்கிய அரங்கிற்கும் புத்தொளியைத் தேடித்தந்தது! இல்லாமையைக் கொல்வதற்குத் தனது எழுத்தை ஒரு தொழிலாக்கி எழுதத்துவங்கியவர் பிற்காலத்தில் பார்புகழும் பெருமையோடு வாழ்ந்தார்!—ஆனால் வறுமையோடுதான்!

தனது ஒப்பற்ற இலக்கியப் படைப்புகள் அவருக்குப பல்லாயிரக்கணக்கான 'பிராங்கு"களைச் சம்பாதித்துத் தந்தன என்றாலும், அவர் ஒரு பணக்காரனாக இருந்தால் ஏற்படுகின்ற இறுமாப்புக் கொண்டதில்லை! கிடைத்த வருவாய் அத்தனையும் பிறகாலத்தைப் பற்றி எண்ணிப் பார்க்காமல் அவர் செலவழித்தார்!

பெரும பண நெருக்கடி ஏற்படுகின்ற நேரத்திலும், கடன்காரர்களின் தொல்லை அளவிற்கு அதிகமாக வளர்ந்துவிட்டாலும் மாத்திரமே அவர் தமது தேனினும் இனிய கற்பனை ஓவியங்களை ஏட்டிலே வடிப்பார்! "ஏழ்மையும், கடன் தொல்லையும் அவரை வாழ்நாள் முழுவதும வாட்டியிருக்கக் கூடாதா? இன்னும் பல பேரிலக்கியங்கள் கிடைத்திருக்குமே!" என்று உலகம் அவரைப்பற்றி எண்ணுகிறது!

உலகப் புகழ்பெற்ற ஓர் எழுத்தாளனாக் ஆகும் எந்த அறிகுறியும் அவரது இளமைப்பருவ வாழ்க்கையில் காணவில்லை! முழுச் சோம்பேறியாக உள்ள ஒரு சிறுவனுக்கு இத்தகைய ஒளிமயமான ஓர் எதிர்காலம் இருக்குமென்று யாரும் எதிர்பார்க்கவேயில்லை! பாடபுத்தகங்களைப் படிக்க வேண்டிய பருவத்தில் பிரபல எழுத்தாளர்களின் நாவல்களைப் படிபபதில் மூழ்கிக் கிடந்தான் அவன்! அந்தச் சிறுவனது இலட்சியமெல்லாம் "தான் ஒரு எழுத்தாளனாக ஆகவேண்டும்" என்பதுதான் என்று அவர் பிற்காலத்தில் கூறினார்!

நவநாகரிகப் பெரு நகரமாம் பாரிஸ் நகரத்தின் எழில்மிக்க மாளிகையொன்றின் மாடியில் அமர்ந்துதான் அவர் தமது முதல் எழுத்தோவியத்தைத் துவக்கினார்! அந்த எழுத்தோவியம் பிரசுரிக்கப்பட்டது என்றாலும், அதனால் பயன் ஏதும் ஏற்படவில்லை! அதை அச்சியற்ற முடிந்ததே பெரும் பேறு என்று அவர் அன்று எண்ணினார்!

அளவு கடந்த ஆர்வத்தோடு அந்த எழுத்தினைத் தனது இல்லத்திலுள்ளோருக்குப் படித்துக் காண்பித்தார்! ஆனால் அவர்கள் அதனை உதாசினம் செய்தனர்! பேராசிரியர் ஒருவர் அந்த எழுத்தோவியத்தைப் படித்துவிட்டு, "இனித்தாங்கள் எதுவும் எழுதாமலிருப்பது எழுத்துலகிற்கு மிகவும் நல்லது" என்று ஆலோசனை கூறினார்! தனது எழுத்தைப் பாராட்டாத அந்த மனிதப் பிறவிகள்மீது அவருக்கு வெறுப்புத்தான் தோன்றியது! அந்த வெறுப்பு, சூளுரையாகவும் மாறியது! எழுதினார் — எழுதினார் — எழுதிக்கொண்டே இருந்தார்! யார் தன்னை இகழ்ந்தார்களோ, அவர்கள் அனைவரும் பாராட்டுகிற வரையில எழுதினார்!

பாரிசில் உள்ள அவரது இல்லத்தில் அமர்ந்து அவர் எழுதத் துவங்கிய காலத்தில்தான் அடுத்த வீட்டில் குடியிருந்த மேடம் டிபார்னி என்ற மாதை அவர் காதலித்தார்! சதா சர்வ காலமும் நோயின் பிடிப்பில் சிக்கிக் கிடந்த கணவனும், ஏழு குழந்தைகளும் உள்ள, நாற்பத்து ஐந்து வயதுடைய டிபார்னி இளமை குன்றாதவளாகவே காட்சியளித்தாள்! இளைஞன் பால்சாக்கிற்கும் டிபார்னிக்குமிடையே ஏற்பட்டுள்ள தொடர்பைப்பற்றி நாட்டு மக்கள் வெறுப்புடன் பேசிக்கொண்டனர்! யார் என்ன சொன்னாலும் அந்தத் தொடர்பு, பால்சாக்கைப் பொறுத்த வரையில் பயன் தருவதாகத் தோன்றியது!

டிபார்னி தனது இருபத்து ஏழு வயதே ஆன இளம் காதலனுக்கு நாற்பத்து ஐந்தாயிரம் பிராங்குகள் அன்பளிப்பாகத் தந்தாள்! அந்தப் பொருளுதவியால்தான் ஒரு அச்சகத்தையும் ஒரு வெளியீட்டகத்தையும் துவக்கி நடத்த அவரால் முடிந்தது! ஆனால் அச்சகமும், வெளியீட்டகமும் ஒழுங்காகச் செயல்படவில்லை! நாளும் கடன்தொல்லை வளர்ந்து கொண்டே வந்தது! கடனுக்கு ஈடாக அச்சகமும் வெளியீட்டகமும் பறிபோகும் நிலையும் ஏற்பட்டது. அந்த நேரத்தில் அவரது வயோதிகத்தாய் பெரும்பாடுபட்டுக் கடன் தொல்லையிலிருந்து அதனை மீட்டார்! அவனது காதலியும் அந்த நேரத்தில் நாலாயிரம் பிராங்குகள் அளித்து உதவி புரிந்தாள்!

தனது முப்பதாவது வயது வரையில் பால்சாக் ஓர் சிறந்த எழுத்தாளனாகவோ, அல்லது ஒரு தொழில் நிபுணனாகவோ இருக்கவில்லை! தொழில் துறையில் தான்முன்னேற முடியாது என்று தெரிந்த பின்னர்தான் அவர் தனது முழு நேரத்தையும் எழுதுவதிலேயே செலவழித்தார்!

இலக்கிய வளர்ச்சியில் மக்கள் ஆர்வங்கொண்ட ஒரு நல்ல சூழ்நிலையில்தான் அவர் தனது முதல் நாவலை எழுதத்துவங்கினார்! "லெஸ் அவன்ஸ்" என்ற அந்த நவீனம் அவருக்கு நல்ல புகழையும், பெரும் செல்வத்தையும் அள்ளிக்குவித்தது! அந்தப் புகழொளியில் அவரது எழுத்துக்கள் தொடர்ந்து வெளிவரத் தொடங்கின! புகழ்பெற்ற "ஹ்யூமன்காமெடி" "ஓல்ட்மான்கோரியா" முதலிய நாவல்கள் அவருக்கு மேலும், மேலும், புகழையும், பொருளையும்

(12-ம் பக்கம் பார்க்க)

# காதல் பிறந்த விதம்

**கரந்தை-கணேசன்**

அப்பொழுதுதான் அஞ்சற்காரன் வளவனின் அறையில் கடிதம் ஒன்றை வீசிவிட்டுச் சென்ருன். ஓடி எடுத்தான். கடிதத்தில் தன்னுடைய முகவரியை எழுதியிருக்கும் எழுத்துக்களைப் பார்த்தவுடனேயே அக்கடிதத்தை யார் எழுதியிருப்பார்கள் என்பது புரிந்துவிட்டது அவனுக்கு. கடிதத்தை எடுத்து அவனை மறந்த நிலையில் முத்தமிட்டான். முத்தமிட்டதற்குப் பிறகுதான் தான் முத்தமிட்டதை வேறு யாராவது பார்த்துக்கொண்டு விட்டார்களோ என்ற எண்ணம் வளவனுக்கு ஏற்பட்டது. சுற்றும் முற்றும் பார்த்தான்; ஒருவரும் இல்லை என்பது தெரிந்தவுடன் அவன் மனம் அமைதியுற்றது. மனம் அமைதியுற்ருலும் அவன் வாய் முணுமுணுத்தது. மனிதன் எவ்வளவு தான் தற்காப்புள்ளவனுக இருந்தாலும் சில வேளைகளில் தன்னையும் மறந்து தன் பாதுகாப்பைத் தானே இழந்துவிடுகிருன். எல்லாம் உணர்ச்சிதான் காரணம்.

கடிதத்தை ஏதோ எடை போடுவது போல் கரத்தால் நிறுத்துப் பார்த்தான். பிறகு முன்னும் பின்னும் திருப்பித் திருப்பிப் பார்த்தான். அவன் முகம் மலர்ந்தபடி இருந்தது. பின்னர் கடிதத்தைத் தன் முன்னுலே உள்ள மேசையின் மேல் போட்டுவிட்டு, அதைப் பார்த்தபடியே இருந்தான். அவன் கரங்கள் மகிழ்ச்சியால் துவண்டன. மேசையின்மேல் கிடந்த கவரை மீண்டும் எடுத்து முத்தமிட்டான். கவரை உடைக்க அவன் கைவிரல்கள் விரைந்தன. பின்னர் அதே விரல்களே கூடாது என்னும் ஜைகையைக் காட்டிக்கொண்டன.

அந்த நேரத்தில் அவனுடைய மன நிலையை அவனுலேயே அளக்க முடியாது என்றே கூறவேண்டும். ஒருவேளை மனோதத்துவ நிபுணர்கள் வேண்டுமானுல் அளக்கக் கூடும்.

எதிரே இருந்து வேறு யாராவது பார்த்துக்கொண்டிருந்தால்-- அவனைப்பற்றி எதுவும் புரியாதவர்கள், அவனைப் பைத்தியமென்றே கருதினுலும், அதில் எதுவும் தவறு இருப்பதாகக் கருத முடியாது. எந்த உணர்ச்சியும் அத்துமீறி அனுபவிக்கிற நேரத்தில் பைத்தியகாரச் செயலாகத் தானே ஆகிவிடுகிறது.

எப்படியோ ஒருவாருக கவரை உடைத்து உள்ளிருந்த கடிதத்தை எடுத்தான், மறுமுறையும் ஒரு முறை கடிதத்தை முத்தமிட வேண்டும் என்ற உணர்ச்சி தோன்றிற்று. அதை ஏனே அடக்கிக் கொண்டான்! சுற்று முற்றும் ஒரு கண்ணோட்டம் விட்டுவிட்டுக் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினுன்.

அன்புள்ள வளவனுக்கு!

வணக்கம்!

தங்கள் கடிதம் கிடைக்கப்பெற்றேன். யாவும் அறிந்தேன். அறிந்தேன் என்பது மட்டுமல்ல, யாவும் அறிவேன். அறிவேன் என்ருல் இக்கடிதத்திற்கு முன்பே தங்களின் போக்குகளைப் பற்றியும், மன நிலையைப்பற்றியும் நான் அறிவேன்,

அதற்கு மேலும் கடிதத்தில் வாசகங்கள் நீண்டன. இருந்தாலும் வளவனுல் தொடரமுடியவில்லை. சிறு குழந்தைகளுக்கு எதிர்பாராத நிலையில் தின்பண்டங்கள் கிடைத்தால் அதை வைத்துக்கொண்டு உண்ணவும் மனம் வராமல், உண்ணுமலும் இருக்க முடியாமல் திண்டாடுமே! அது போல இருந்தது வளவனுக்கு. மீண்டும் முதலிலிருந்து தொடர்ந்தான். அன்புள்ள...... மீண்டும் முடிக்க முடியவில்லை. திணறினுன். ஆகா... இது என்ன கடிதமா? காவியமல்லவா! காதல் காவியம்! ஒவ்வொரு வரிக்கும் ஒவ்வொரு ஓவியம் தீட்டலாமே என்றது அவன் மனம்.

எழுத்துக்களுக்கும் உயிருண்டு' அது எவனையும் எதற்கும், தயாரிக்கவும் கூடும் என்பதை அப்பொழுதுதான் உணர்ந்தான். அக்கடிதத்தின் ஒவ்வொரு வரியும் அவன் உள்ளொளி பெருக்குவது போன்றிருந்தது. ஒவ்வொரு எழுத்தும் அமுதத்தின் ஒவ்வொரு துளியாகக் கருதினுன். வாழ்நாள் முழுதும் இந்த அமுதத் துளிகளையே பருகியபடி இருந்துவிட்டால்......? இதை நினைத்தவுடன் அவனை யாரோ! தட்டி எழுப்புவது போன்றிருந்தது. இந்த அமுதத் துளிகள் என்ன? இந்த அமுதத் துளிகளை வீசியவளே நம்மவள் ஆகப் போகிருள். அதைத்தானே இக்கடிதம் கூறப்போகிறது. அப்புறம்....... அப்புறம்...... என்ன? அமுதம் தோற்றுவிடும். மேலும் சிந்திக்க முடியவில்லை அவனுல், நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு கடிதத்தைத் தொடர்ந்தான்.

என்னை அளவுக்கு மீறிப் புகழ்ந்திருக்கிறீர்கள். உங்கள் புகழ்மொழிகளைப் படிக்கின்ற நேரத்தில் அந்தச் சொற்கள் என்னைப் போதை கொள்ளத்தான் செய்கிறது. ஆனுல்...என்மனம், பெண்கள் எப்பொழுமே புகழ்ச்சிக்கு மயங்கிவிடுவார்கள் என்று எப்பொழுதோ! யாரோ! எழுதியதை அறிவுறுத்திக்கொண்டே இருக்கிறது. மேலும் நான் அத்தகைய புகழ்மொழிகளுக்கும் தகுந்தவளல்ல.

அடுத்து, தங்கள்.... தங்கள்.... இதில் என்ன ஒழிவு மறைவு வேண்டிக் கிடைக்கிறது. ஒரே வரியில் பதில் கூறிவிடுகிறேன். அந்த வரியே இறுதியானது, முடிவானது.

ஆம், தங்களுக்கும் எனக்கும் ஒரே கல்லூரியில் படித்தவர்கள் என்பதைத் தவிர வேறு எந்த உறவும் வேண்டியதில்லை.

இங்ஙனம்,

மலர்விழி.

வளவன் படித்து முடித்தான். மறுமுறையும் கடை வரியைப் படித்து முடித்தான். முடித்தானு...? என்னவோ! அவனைத்தான் கேட்க வேண்டும். தடந்தவருமல் ஓடிக்கொண்டிருந்த இரயில் வண்டி தடந்தவறிவிட்டால் என்ன நிலை அடையுமோ! அதே நிலையை அடைந்துவிட்டது அவன் மனம். இங்ஙனம்...... "மலர்விழி" அவனுல் அதை நம்பவே முடியவில்லை. "இங்ஙனம் மலர்விழி" அவன் மனம் அவனையும் மீறி கத்திக்கொண்டிருந்தது. அவன் உள்ளமும் உடலும் வெட வெடத்துப் போயிற்று. சற்று முன்பு இன்பமே உருவாகத் தெரிந்த இந்த உலகம், தற்போது அவனுக்குக் கோர உருவாக மாறி நிற்பதாகத் தோன்றிற்று. சுற்றி இருக்கும் ஒவ்வொரு பொருளும் அவனைப் பார்த்துப் பார்த்துச் சிரிப்பது போல அவனுக்குப் பட்டது. இந்த உலகத்திலிருந்து எங்காவது ஓடிவிட வேண்டும். எங்கே ஓடுவது? எங்கு சென்ருலும் இதே போன்ற மக்கள்—ஆண்—பெண்—வாழ்க்கை—காதல்—போர் இவை தானே. அப்படியானுல் இந்த உலகத்திலிருந்தே விடை பெற்றுவிட்டால்? கேள்வி கணநேரந்தான் நிலைத்தது. சே! கோழைகளின் செயலல்லவா அது!

அவன் மனம் அவனைப் பின்னிப் பின்னி எடுத்தது. தன் உடலின் ஒவ்வொரு பகுதியும்; தனித் தனியாகக் கழன்றுபோய் ஒன்றில் ஒன்று செருகிக்கொண்டது போன்ற உணர்ச்சியில் உழன்ருன். இறுதியில் எதுவும் நினைக்கவோ, செய்யவோ முடியாத நிலையில், சாய்வு நாற்காலியில் சாய்ந்து கண்ணை மூடினுன். தலை சூடேறிக் கொதித்துக் கொண்டிருந்தது.

மெல்லக் கண்ணைத் திறந்து பார்த்தான். இப்பொழுது உள்ளத்தில் மிகப் பெரிய சோர்வு தென்பட்டாலும், ஒரு தெளிவு இருந்தது. எண்ணவோ, சிந்திக்கவோ, திறனற்றுப் போயிருந்த அவன் மனம் எதையும் எண்ணும் அளவிற்குப் பலப்பட்டிருப்பதாக அவனுக்குப் பட்டது. நச்சுக் காய்ச்சலிலிருந்து எழுந்தவனுடைய நிலை போன்றிருந்தது அவன் நிலை. காதலும் ஒருவகையான காய்ச்சல் தானே! உளக் காய்ச்சல்!

எதிரே கிடந்த கடிதத்தை மறுமுறையும் பார்த்தான். இப்பொழுது அப்பார்வையிலே ஏதும் சலனம் இருப்பதாகத் தெரியவில்லை. இறந்து கிடக்கும் பிரேதத்தை, பற்றும், பாசமும் அற்றுப் போன ஒருவன் பார்ப்பதுபோலப் பார்த்தான். மெல்லக் கடிதத்தை நிமிர்ந்து எடுத்தான். அவன் கண்கள் எழுத்துக்கள் மீது நகர்ந்தன: 'அன்புள்ள......' படித்து முடித்தவுடன் அவன் அறிந்தும் அறியாமல் உதடுகள் பிதுங்கின. அவன் மனம் பின்னே ஓடும் இரயில் வண்டியைப்போல ஓடியது என்ருலும். கடந்து வந்த தன் வாழ்வின் சுவடுகளை பின்னேக்கிப் பார்ப்பதற்கு அவ்வளவாக ஒருப்படவில்லை. அவன் என்ன? மனிதர்களில் பெரும்பாலோர் அப்படிதான்; தன்னைப்பற்றிய கடந்த காலச் சிந்தனைகளுக்கு ஒருப்படுவதில்லை. அப்படி ஒருப்பட்டுவிட்டால்தான் உலகம் என்ருே முன்னேறியிருக்குமே!

மலர்விழி — இந்தக் கடிதம். இவைகள் இரண்டிற்கும் இடைப்பட்ட நிகழ்ச்சிகள்; நடந்துவந்த காட்சிகள்; கட்டிய கற்பனைக்கோட்டைகள் எத்தனை எத்தனையோ அத்தனையும்...? அவனுல் மேலும் சிந்திக்க முடியவில்லை. மன்னுதி மன்னனொருவன் எதிர்பாராத விதமாக வாகையிழந்து, வாளிழந்து, முரசிழந்து, முடியிழந்து, நாடிழந்து, நகரிழந்துவிட்டால் கற்பனைக்கே எட்டாத அளவில் கலக்க முறுவானே, அதேபோலத்தான் வளவனின் கலக்கமும் ஆகிவிட்டது. வளவனைப் பொறுத்தவரை வாகை வாள் இன்னபிற எல்லாம் அவள் தானே.

மீண்டும் மனதிலே பாரம். யாரோ தன் நெஞ்சுக்குழியை அழுத்துவது போன்ற பிரமை. இருந்தாலும் சமாளித்தவனுய் "சே...! வாழ்வில் எத்தனையோ வகையான நிலைகளை எல்லாம் இனியும் சந்திக்க வேண்டியிருக்கிறது. இதற்கே இப்படிக் கலக்கப்பட்டால்" என்று கூறியவாறே நிமிர்ந்து உட்கார்ந்தான். ஏதோ புதிய "டானிக்" குடித்தது போன்றிருந்தது அந்தச் சொல் அவனுக்கு.

## குருட்டு நோயை தடுக்கும் முயற்சி!

மேற்கு ஆப்பிரிக்க நாடுகளில் ஆற்றுப்படுகையில் பறக்கும் ஒரு வகை ஈக்கள் மக்களைக் கடிப்பதால் மக்கள் பார்வையை இழக்க நேரிடுகிறது. இந்த நோயைத் தடுக்க, இராயல் காமன்வெல்த் சொசைடி நான்காண்டுக் காலம் ஆராய்ச்சி நடத்திற்று. இதனுல் கனு, நைஜீரியா, காமரூன்ஸ் ஆகிய நாட்டு மக்களுக்கு நன்மை ஏற்படக்கூடும்.

இராயல் சொசைடியின் ஆய்வாளர்கள் இரு குழுக்களாகப் பிரிந்து ஆய்வுப்பணி நடத்தினுர்கள். டாக்டர் கிரிஸ்பின் தலைமையில் சென்றவர்கள், நோயைப் பரப்பும் ஈக்களைப்பற்றியும் அவைகளை பாதுகாத்து கட்டுப்பாடு செய்வது பற்றியும் ஆராய்ந்து ஓர் அறிக்கையைத் தயாரித்தார்கள்.

டாக்டர் F.C. ராட்ஜூர்சன் தலைமையில் சென்ற ஆய்வாளர்கள், நாட்டின் எட்டாக் கையிலுள்ள பகுதிகளுக்கெல்லாம் சென்று ஆராய்ச்சி செய்தார்கள். டாக்டர் ராட்ஜர்ஸ், சுமார் 100,000 மைல்கள் பிரயாணம் செய்து தகவல்களைச் சேகரித்தார். அவருடைய அறிக்கை 27—10—59 அன்று இலண்டனில் வெளியிடப்பட்டது.

இந்த மாபெரும் சமூக—நலப் பணிக்கு பிரிட்டிஷ் மக்கள் சுமார் 60,000 பவுன்களை திரட்டியளித்தார்கள். "இது மாபெரும் பணி, இதைப்போல உலகில் வேறு எந்தப் பகுதியிலும் ஆராய்ச்சி நடந்ததில்லை" என்று பிரபல கண் வைத்தியர், சர் டேவர்ட் டியூக் எல்டர் கூறுகிருர்.

சிகரெட் ஒன்றினை எடுத்துப் பற்றவைத்துக்கொண்டு சுருள் சுருளாக அலை நிமிர்ந்து ஓடுவது போலப் புகைச் சுருளை விட்டவண்ணம் எண்ணலானான்.

மலர்விழி. நல்ல அழகி மட்டுமல்ல; அருங்குணவதி. இயற்கை தன் கரங்கொண்டே தீட்டிய எழிலோவியம். சந்தனச் சேற்றை சதையாகக்கொண்டு சரிப்படுத்தப்பட்ட மண மங்கை என்றெல்லாம் எண்ணியிருந்தது உண்டு. ஆனால் அந்த எழில் வள்ளிக்கும் தனக்கும் எதிர்பாராத அறிமுகம் ஏற்படும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. விண்மீன்களைப் பறித்துக் கூந்தலிலே சூடிக்கொள்ள வேண்டும் என்று யாரும் எண்ணுவதில்லை அல்லவா? ஆனால் விண்மீனே சூடக் கிடைத்துவிடும் போலிருந்தால்... அதே நிலையைத்தான் பெற்றான் மலர்விழியின் அறிமுகம் ஏற்பட்டதும்.

கல்லூரியின் தமிழ்ப் பேரவையிலே வளவன் செயலாளர், மலர்விழி துணைச்செயலாளர். ஒருவருக்கொருவர் பேரவை நிகழ்ச்சிகளுக்காக உற்று, உதவி, நெருங்கிப் பழகவேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது. அந்த வாய்ப்பின் விளைவுதான் மலர்விழி மீது வளவன் கொண்ட காதல். ஆனாலும் வளவனின் மனம் மட்டும் சில சமயங்களில் ஏனோ அவனுக்கு எதிரிடையாகவே வேலை செய்து வந்தது. ‘வாய்ப்பையும் பழக்கத்தையும் கொண்டே எல்லாம் வாய்த்துவிட்டது என்று எண்ணிவிடாதே’ என்றுகூறிவந்தது, ஆனால் அதே மனம் அவனுடைய எண்ணங்களுக்குத் தூபம் போடாமலும் இல்லை. ‘மலர்விழியின் பேச்சு, செயல், பழகும் முறை எல்லாம் என்உள்ளத்தின் எதிரொலியாகத்தானே இருக்கிறது’ என்றது சில வேளைகளில்.

சிக்கலான இந்த முடிப்பை அவிழ்த்துவிடவேண்டும் என்று வேறு அவன்மனம் துடித்தது—அதன் விளைவுதான் அவன் மலர்விழிக்கு எழுதிய கடிதம்.

இன்னும் அவனால் நம்பமுடியவில்லை. அவள் எழுதிய கடிதம் தானா அது? அவனுக்கே சந்தேகம். எப்படிப்பழகினாள், எவ்வளவு இனிமையாகப் பேசினாள், சிரித்துச் சிரித்து நம் உள்ளத்தைச் சிதைத்தாள். அவளா இப்படி எழுதிவிட்டாள்? வேண்டுமென்றே இப்படி எழுதி வேடிக்கை செய்கிறாளா? அவனால் எதற்குமே விடைகாண முடியவில்லை. ஒருவேளை நம்மைப்பற்றி...? என்ன...? நாமென்ன விரும்பியா அதை ஏற்றுக்கொண்டோம். வேடிக்கையாக ஏதோ உறவு முறையைக்கொண்டு உற்றாரும் ஊராரும் பேசிய கடந்த காலக் கனவு அது. அந்தக்கனவை நினைவாக்கத் துடிக்கிறாள் அவள். அவள்தான்! அந்த நிர்மலா...என் மாமன் மகள். நான் என்றுமே சம்மதம் தெரிவித்ததில்லையே அவளோடு வாழ்வதற்கு. அவளும் நானும்தான் எப்படி இணைந்து வாழமுடியும்? அவளோ சிறிது படித்தும் பகட்டுத் தெரியாத பாவை—நானோ பட்டதாரியாகப் போகிறவன். எனக்கும் அவளுக்கும் உள்ள ஏற்ற இறக்கத்தைக் காட்ட இது ஒன்றே போதாதா? இருமனம் ஒன்றுபட்டால் அல்லவா திருமணம்? ஒன்றுபடாத மணவாழ்க்கை......?

கேள்விக்கு விடைகாண்பதற்குள் அவன் மனத்திலே எங்கிருந்தோமின்வெட்டுக்கிளம்பிப்பளிச்சிட்டது. அதேபோல் நீ விரும்பும் மலர்விழியும் உன்னை விரும்பினால் அல்லவோ திருமணம்? கேள்விக்கணைக்கு அவனால் ஈடுகொடுக்க முடியவில்லை. நினைவுகள் திக்குமுக்காடின. மனம் நட்பாக இருப்பதுபோலவே எதிரியாகவும் இருக்கிறது என்று எண்ணினான். அதற்குள் மேலும் ஓர்மின்வெட்டு. ஏதோ இடைக்காலத்திலே எப்படியோ சந்தித்ததால் பழகியவள், கிடைக்கவில்லை என்பதற்காக இத்தகு உயிர் வாதைப்படுகிறாய். காலம் முழுமையும் உன்னை எண்ணியே நாட்களைக் கழிக்கும் ஓர் அபலையின் மனம் என்ன பாடுபடும்! இதை எண்ணிப் பார்த்தாயா?’’

அவனால் மேலும் அமைதியாக அமர்ந்திருக்க முடியவில்லை. ‘டிராயரை’ இழுத்துத் தாள்களை எடுத்து எழுதினான்.

அன்புருவான அப்பாவுக்கு!

வணக்கம்.

வருகிற கோடையில் எனக்கும் நிர்மலாவுக்கும் திருமணம் நடைபெறட்டும். இதற்குமேல் என்னால் எதுவும் எழுதமுடியவில்லை.

அன்பு மகன்;

**வளவன்.**

கடிதத்தைத் தபாலுக்கு அனுப்பிவிட்டுக் கல்லூரிக்குப் புறப்பட்டுவிட்டான். அவனுக்குத் தன் மாமன்மகளான நிர்மலாமீது பிறந்துவிட்ட திடீர்க் காதலைப் பற்றி எண்ணும்பொழுதெல்லாம் அவனை அறியாமலே சிரிப்பு வரும்.

❀

## 9-ம் பக்கத் தொடர்ச்சி

சேர்த்தன! உலகம் அவரை உன்னிப்பாகக் கவனிக்கத்துவங்கியது!

இரவு உணவுக்குப்பின் உறங்கச் செல்லும் அவர் உலகம் உறங்கும் வேளையில் — இரவு ஒரு மணிக்கு எழுந்துகொள்வார்! அறையில் எரிந்துகொண்டிருக்கும் மெழுகுவர்த்தியின் அருகிலமர்ந்து அவர் எழுத ஆரம்பித்தால் காலைக் கதிரவனின் ஒளிக்கதிர்கள் சன்னல் வழியாக அவர் உடலைத்தாக்கும் வரையில் உலகை மறந்து கற்பனைச் சுழற்சியில் நீந்திக்கொண்டிருப்பார். ஓர் மாபெரும் இலக்கியத்தின் பல இதழ்கள் அன்று உருவாகியிருக்கும்!

தனது எழுத்துக்களை வெளியிடுகின்ற நிறுவனத்தாருடன் அடிக்கடி சச்சரவிட்டுக்கொள்வது அவரது வழக்கம்! இவை பெரும்பாலும் நீதிமன்றங்கள் வரையில் சென்றுதான் முடிவடையும்!

மாபெரும் இலக்கியங்களை உலகுக்களித்த இந்த மாமேதை ஓர் ஆடம்பரப்பிரியர்! அரண்மனை போன்ற மாளிகை ஒன்றை வாடகைக்கு எடுத்துக்கொண்டார்! ஏராளமான வேலையாட்கள் அதன் பாராமரிப்புக்காக அமர்த்தப்பட்டனர்! அவரது இந்த ஆடம்பர வாழ்க்கை அவரை எப்பொழுதும் கடன் தொல்லையிலேயே ஆழ்த்திக்கொண்டிருந்தது! எவ்வளவு கடன் தொல்லைகள் வந்தாலும் கவலை கொள்ளாமலே அவர் வாழ்ந்துவந்தார்! தமது இல்லத்திற்கு வரும் விருந்தினரிடமும் நண்பர்களிடமும்கூட அவர் கடன் கேட்க அஞ்சவில்லை! கடன் தொல்லைகள் அதிகமாகிறபோது தான் அவரது எழுத்தின் வேகமும் அதிகமாகும். எது எப்படி இருப்பினும் அவரை நித்த நித்தம் கடன்தொல்லைக்காளாக்கி அதன் மூலம் பல சுவையான எழுத்தோவியங்களை உலகுக்களிக்கச் செய்த அந்த ஆடம்பரத்தை நாம் வாழ்த்துவோம்! வாழ்க வறுமையில் பிறந்த எழுத்தாளர்கள் வளர்க அவர்கள் தந்த இலக்கியங்கள்!

❀



## 4-ம் பக்கத் தொடர்ச்சி

...றைப் பாடிக்கொண்டே பொற்சுண்ணம் இடிக்கின்றனர். அவர்களின் பாடல் அவளின் செவிகளிலே தாக்கிற்று. தானும் தன் காதலைப் பாடி அத் தையலர்போல் சுண்ணம் இடித்துச் சுகித்திருக்கக் கூடவில்லையே; அன்னை தடைபோட்டாள்; அதை மீற முடியாமல் என்ன கதறிட நான்? என்று மனத்தாங்கல் பொறுக்காது தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள், தன் உணர்வில் கிளர்ந்த உரைகளை! “அழகிய அப்பெண்டிர் பெற்ற பேறுதான் பெரிது! யானோ, அன்னையின் காவலில் உளேன்; என்ன செய்வேன்?’’ என்கிறாள், பாண்டியனைத் தீண்டி அவன் படர் மார்பில் சாயவிரும்பும் அப்பைங்கிளி! ஆனால், எண்ணம் நிறைவேறுமா? ஏக்கம் அதிகரிக்கிறது. அந்த எழிலோவிய வடிவழகிக்கு! அவளது எண்ண அலைகளை வண்ண ஓவியமாய் வடித்தெடுத்துத் தருகிறார் கவிஞர்; படித்தின்பம் பெற வாரீர், பாரீர்! இதோ, அப்பாடல்:

> **கோடி பாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்**
> **முடிபாடி முத்தாரம் பாடித்—தொடியுலக்கை**
> **கைம்மனையில் ஓச்சப் பெறுவேனே யானுமோர்**
> **அம்மனைக் காவல் உளேன்.**

‘ஏக்கத்தின் தொனி, இதய ஒலி, இளநெஞ்சின் ஆர்வம் ஆகிய இவற்றை நாலடி வெண்பாவிலேயே நாவிற் சுவை பயக்கப் பாடிக்காட்டும் பாவலரின் திறம் பைந்தமிழுக்கேயுரிய சிறப்பன்றோ? முத்தொள்ளாயிரம் என்ற முத்து மாலையிலிருந்து சிதறிய ஓர் தனி முத்தே இத் தன்மையதான ஒளி படைத்த தாலன் அம் முத்தாரத்தின் முழு மணியொளியைக் காண்டலும் எளிதாமோ?

• • •

இத்தகைய எழில்மிக்க பாண்டியனின் நாடு மட்டும் என்ன எழிலற்றதா? அல்ல. எல்லா வளமும் படைத்தது. வறுமை இல்லா நலமுடைத்தது. முழங்கு அலை தண்கடல் வழங்கும் ஒளி முத்துக்கள் மட்டும் போதுமே, பாண்டியனின் மண் செழித்த மண்டலங்கள் பொன் கொழித்துப் புகழ்தெறிக்க!

பாண்டிய நாட்டின் மண்ணிலே பசும்பொன் விளைச்சல்! அனைத்து பட்டினங்களிலோ முத்தமிழ் நூல் கற்ற வித்தகரின் கூட்டம்! ஆறு, கடல் ஆகியவற்றின் நீர் நிலைகளிலோ தண்பட்ட இனிமை தரும் வெண்பட்டுப் போலும் வியன் முத்துச் சங்குகள்! அச்சங்குகளிலோ பொங்கியொளிர் தங்கக் கதிரனைய சுடர் முத்துக்கள்! இவை மட்டுமா? மாறனின் வளமார்ந்த மலைப்பகுதிகளிலோ, யானைகளின் கூட்டம்; வானளாவிய மரங்களின் ஈட்டம்! அகிலும், தேக்கும், முகிலெட்டிய மூங்கிலும், மணக்கும் சந்தனமும், மயக்கும் மலர்ச் செடிகளும், மருண்டோடும் மான் கூட்டங்களும், உருண்டோடும் நீரின் வாய்க்கால்களும், அலை புரண்டோடும் புது வெள்ளப் புனலோட்டச் சிற்றாறுகளும், தண்ணஞ் சார்ந்த அருவிகளும், எழில் வண்ணஞ் சார்ந்த பூங்கொடிகளும் ஏராளம்! ஏராளம்!! உண்ண உணவுக்கோ உயிரூட்டும் நெல் வயல்கள்; இரும்புத் தோட்டங்கள்; கனிச் சோலைகள்! அங்கங்களில் பூட்டி அழகு பார்க்கவோ தங்கத்தால் செய்த ஆபரணங்கள்! அணிசெய்யவோ மணிக்கோவைகள்! இத்தனை வளமுடையது இந் நாடு. இதனை,

> **பார் படுப செம்பொன் பதிபடுவ முத்தமிழ் நூல்**
> **நீர் படுப வெண்சங்கும் நித்திலமும்—சாரல்**
> **மலை படுப யானை வயமாறன் கூர்வேற்**
> **றலை படுப தார்வேந்தர் மார்பு.**

என்ற நாலடிப் பாடலில் நயம்பட விளக்குகிறது முத்தொள்ளாயிரம்.

பாண்டியனின் கடற்கரைப் பட்டினம் கொற்கை. புயலால், தாக்குண்டு, பொங்கு கடலேறி, அயல் நாட்டிலிருந்து வரும் நாவாய்கள் அதன் துறைமுகத்தில் வந்திறங்கி, முத்துக்களை ஏற்றிச் சென்று, அவைகளுக்குப் பதிலாக பொற்காசுகளைக் குவிக்கும் புகழுடையது அந்நகர். பலநாட்டு வாணிகரும் வந்து தங்கள் திறத்தை நிலைநாட்டும் நகரமது. அதன் கடற்கரையோ அழகு மிக்கது. வெள்ளிய மணல்கள் ஒள்ளிய விண்மீன்கள்போல் தோன்றும். கடற்கரையோரமாகச் சென்றால், காண்டற்கரிய காட்சிகளைக் காணலாம். எல்லையற்ற மணற்பரப்பு; அங்கே மணல் வீடு கட்டி விளையாடும் தொல்லையற்ற இளஞ்சிறுவர், சிறுமியர்!! அப்பால், கரைமீது வேகமாகப் பாய்ந்து வந்து திரை மோதும் காட்சி! கரையோரத்திலே பந்தல்போல் காணப்படும் கமுக மரத்தின் பாளையிலிருந்து சிந்திய மணிகள்; அப்பால், புன்னை மரங்கள் உதிர்த்த குவிந்த அரும்புகள்; இவற்றிடையே இளமையான சங்குகள் ஈன்றுபோட்ட மதிரா முத்துக்கள்! அலைகள் பாய்ந்து பாய்ந்து மோதுகின்றன. கடற் சங்குகள் அவற்றால் எற்றுண்டு கரையில் தவழ்கின்றன. புன்னைப் பூவின் மொட்டுகளும், பாளை உதிர்த்த மணிகளும் இவற்றோடு கலந்த முத்துக்களுக்கும், அவற்றிற்கும் வேறுபாடு தெரியாத வாறு விரவிக்கிடக்கின்றன. இக்காட்சியினைச் செல்லாங் கண்ட கவிஞர், “யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்’’ என்று கருதி, தான் பெற்றகாட்சியினைத் தமிழ்மக்களும் கண்டுகளிக்கும்படி வெண்பா ஒன்றைத் தருகிறார். அன்று நம் முன்னோர் அரசுக்கட்டிலில் வீற்றிருந்து முரசு கொட்டி வாழ்ந்தபோது, விளங்கித்தோன்றிய கொற்கைத் துறைமுகம் இன்று கடலால் விழுங்கப்பட்டுவிட்டது. ஆனால் அப்பட்டினத்தின் கடற்கரை தந்த இக்காட்சியோ நம் மனக்கண்முன் தெரிகிறது—தெரியச் செய்கிறார். புலவர்,

> **நந்தின் இளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்**
> **பந்தரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்**
> **திகழ்முத்தம் போல் தோன்றும் செம்மற்றே தென்னன்**
> **நகைமுத்த வெண்குடையான் நாடு.**

என்ற பாடலின் மூலம்! தென்னனுடைய வெண்கொற்றக் குடையிலே சிரிக்கின்றமுத்துக்கள் விரிகின்ற எழிற்காட்சிபோல; அவை எரிக்கின்ற சுடரொளிபோல அவனது திருநாடும் எங்கணும் முத்துக்களாகப் பொலிந்து விளங்குகின்றது. நகைமுத்த வெண்குடையானும் பாண்டியனின் நாடு திகழ் முத்தம் போல் தோன்றும் தன்மையுடையது என்கிறார், புகழ் முத்தம் பூண்ட தம் நாவால்!

முத்தொள்ளாயிரம் நம் நெஞ்சங்களை எங்கெங்கோ கொண்டு செல்கிறது; அன்றைய நாளின் உயர்வைக் காட்டுகிறது; நாம் “தனியரசு செலுத்திய “அந்த நாளை’’ நினைவூட்டுகிறது. ஆனால் இன்று? முத்தொள்ளாயிரம் காட்டிய முத்தமிழ் நாடு எங்கே போயிற்று?

நாடு இருக்கிறது; ஆனால் அதன் பழைய பீடும், புகழும்தான் மறைந்துவிட்டது. மறைந்த புகழை ஒளி பரப்புகிறது முத்தொள்ளாயிரம். அப்புகழை மீண்டும் என்று காண்போமோ!

★

# இதுவா அன்பு?

[எம். வி. துரை]

"அந்நாட்டரசனைச் சிறைப்பிடிக்கவேண்டும். அவனது கோட்டையிலே நமது கொடி பறக்கவேண்டும். அவன் களஞ்சியங்களைச் சூறையாடவேண்டும். அவன் நமக்கு வணங்கவேண்டும்; திறை செலுத்தவேண்டும்" என எண்ணுகிறான் அரசன்.

சங்கு முழங்குகிறது. முரசு ஒலிக்கிறது. பறை சாற்றப்படுகிறது. "புறப்படுங்கள் வீரர்களே, புறப்படுங்கள். எதிர்ப்பாரைச் சிறைபிடித்து, வணங்கி நிற்போரை வரவேற்று நண்பர்களாக்கி, திறை வாங்கி மாற்றார்களுக்கு நம் வலிமையை உணர்த்திவருவோம். தமிழனது வீரம் தரணியெங்கும் உணரவேண்டும். தமிழனது புகழ் வானளாவ ஓங்கவேண்டும். தமிழன் காலடிவைக்காத இடமே இருக்கக்கூடாது. தமிழன் கொடி பறக்காத நாடே இல்லையென என்னுளும் கூறவேண்டும்."

நீச்சலடித்துப் பயிற்சி பெற்றவனைக் கைகால் கட்டவிழ்த்துவிட்டு "புறப்படு குளத்துக்கு" என்றதும் எப்படி மகிழ்வானோ, அதுபோல வீரர்கள் முரசொலி கேட்டதும் அளவற்ற மகிழ்வோடு, கத்தியைச் சாணைக்கல்லில் தீட்டுவோரும், உலைக்களத்திலே ஈட்டிகளை வடிப்போரும், அம்புகளைச் சரிசெய்வோரும், தடிகளைத் தயார் செய்வோருமாக அவரவர்கள் தத்தம் வேலைகளில் ஈடுபட்டனர்.

மாதர்கள் மாலை தொடுத்து மணவாளருக்குச் சூட்டிடுவோரும், அவரது குடுமிக்கு எண்ணெயிட்டுச் சீவி முடிப்போரும், விரிந்தமார்பிலே சந்தனம் பூசிடுவோரும், வீரனுக்கேற்ற வெண்நிற ஆடைகளை அணிவிப்போரும், அணிவித்து மகிழ்ந்து "அத்தான்! சென்று வாருங்கள். போரிலே உமது புகழ் பரவி, மன்னன் மகிழ மாலையேற்று வந்தால் வரவேற்பேன். இல்லையேல்..."

"இல்லையேல்..."

'கண்கள் பாராது கரங்கள் நீளாது. கட்டியணைத்திட உள்ளம் நாடாது'

"கண்ணே! உன் அத்தானை அப்படியா நினைத்தாய்."

"தெரியுமத்தான். உங்களுடைய வீரத்தைக் கண்டுதானே மாலையிட்டு மனைவியானேன். கடந்த போரிலே உம்முடைய வீரத்திற்கு மெச்சி அரசர் அளித்த பதக்கம் எனக்குத் தெரியாதா அத்தான்? சென்று வாருங்கள்."

"கண்ணே! நான் வரட்டுமா? படையின் முன்னணியிலே சென்று மாற்றார்கள் தலைகளைச் சீவி இன்னுமொரு பதக்கம் பெற்று வருகிறேன் பார்."

மீண்டும் போர்முரசு ஒலிக்கிறது.

"போய்வாருங்கள் அத்தான். முரசு ஒலிக்கிறது" என்று முக மலர்ந்து அனுப்பிவைப்பர் மறவர் குல மங்கையர்.

வெண்குடைகட்டி, வெண்புரவிகள் பூட்டி, மணிகளால் அலங்கரித்த தேரிலே மன்னன் புறப்படுகிறான். மங்கள வாழ்த்து முழங்க, மாதர்கள் குரவை பாட, யாழ் இசை எழுப்ப, கவிவாணர் கவி பாட, பெரியோர்கள் ஆசிகூற, எரிகதிரோனும் நாணிப்போக ஆரவாரத்தோடு படைநடத்திச் செல்கிறான் மன்னன். வெற்றி, வெற்றி என வீரர்கள் புறப்படுகிறார்கள். 'வாழ்க, வாழ்க' என வனிதையர்கள் வழியனுப்புகிறார்கள். 'போர், போர்' என முரசுஒலிக்கிறது. 'புறப்படு, புறப்படு' எனச் சங்கு தொனிக்கிறது. கரையுடைந்த வெள்ளம்போல் மறவர் படை பாய்ந்து செல்கிறது. வழியெல்லாம் புழுதிக்காடாகிறது. வானமெல்லாம்புழுதிகிளப்பிக்கதிரவனையும் மறைத்துவிடுமோ என்று அஞ்சும்படியான நிலை உண்டாகிறது.

'முரசொலி இடிமுழக்கம் போலும், புழுதி எழும்புவது கருமேகத்தில் காலிறங்கி மழைபொழிவது போலும், குதிரைகள் யானைகள் சிறுநீர் கழிவது மழை பெய்து மண்ணிலே நீர் ஓடியது போலும், வந்து காண்போரின் கண்களுக்கு அவ்வழி காணப்பெறும்.

வீரர்கள் எல்லாம் விருந்துக்குச் செல்வார்போல விரைந்தோடினார்கள். முகமெல்லாம் களிப்பு. இதயமெல்லாம் இன்பப்பெருக்கு. ஆனால் அவ்வீரனுக்கு மட்டும் சலிப்பு.

மன்னன் மார்புக்கு நேரே ஈட்டி வந்தால் தன் மார்பைத் தாங்கும் தன்மையுள்ளவன். பகைவர்கள் சூழ்ந்து சுற்றிவளைத்தால், புய்லெனப்பாய்ந்து தூசுபோல் தூரத்தும் திறம்படைத்த தோளான். ஆனால் அவனுக்கு அன்றுநிம்மதியில்லை. முகத்திலே தெளிவில்லை. 'போய் வாருங்கள் அத்தான்' என்று புன்னகை புரியும் கன்னல்மொழியாளிடம் விடைபெற்றுத்தான் சென்றான். வீரவாளும், வேங்கையின் வாய்போன்ற ஈட்டியும், கண்டோர் மருள, கம்பும் வில்லொடு அரசன் பக்கத்திலேயே சென்றான். ஆனால் சோர்ந்த முகத்தோடு திரும்பிவந்தான்.

கண்டாள் மனைவி. சோர்வுள்ள கணவனின் முகத்தை நோக்கினாள். "ஏன் அத்தான் நீங்கள் போருக்குச் செல்லவில்லையா?"

வீரன் பதில் பேசவில்லை. "ஏன் அத்தான், என்ன நடந்தது?"

"புன்னகை உதிர்க்கும் பொற்கொடியாளே! அன்பில்லாத அரசன் செய்ததைக் கேட்டாயா?"

"என்ன அத்தான் அரசர் செய்தார்? உன்மேல் அளவற்ற அன்புள்ளவராயிற்றே?"

"ஆம்! எல்லாம் பரசாங்கு வெறும்நடிப்பு. வெளிவேடம். பண்பாக நடந்தால், நம்மிடம் அன்பாக இருப்பான்" என்று நடிப்புத்தானே தவிர வேறு இல்லை. மீனவர் வலையேந்திச் சென்று வாளையும் வராலும் வண்டிவண்டியாகக் கொண்டுவந்து குவித்திடுவர். வேட்டுவர் வில்லேந்திச் சென்று கேளையும் குறுமுயலும் கொண்டு வந்து சேர்ப்பார்கள். மலைசாதியினர் விரைத்தேனும் கொம்புத்தேனும் குடம் குடமாகக் கொண்டுவந்து விடுவார்கள். மரத்திலே பாலிறக்கும் அஞ்சாத நெஞ்சினர் தென்னஞ்சாறும் பனஞ்சாறும் ஜாடி ஜாடியாகத் தூக்கி வருவார்கள். முள்ளெடுத்த வரால் மீனை அகிறகட்டையால் தீ மூட்டிச் சுட்டுப் பொசுக்கி நறுநெய்யொழுக தலைவாழையிலையே படைத்து உண்போம். சிறுமணிச் சோற்றிலே குறுமுயல் குழம்பு வார்த்து, கேளைமான் கறி சுவைத்து உண்டிடுவோம். பின்பு கொண்டுவந்த மதுவை எல்லோர்க்கும் இறுத்துக் கொடுத்து உண்டு மகிழும் காலத்தே எங்கள் இருவருக்கும் ஒரு ஜாடி மது தனியே எடுத்து வைத்திடுவோம். மற்ற எல்லோரும் உண்டு போதையால் கூத்தாடுவார்கள். அப்பொழுது மன்னர் அந்த ஜாடி மதுவை எடுத்துவரச் சொல்லி, மேலாகத் தெளிந்த மதுவை அவர் குடித்துவிட்டு எனக்கு அப்படியே கலங்கல் முழுதும் கொடுப்பாரே! அத்தகைய அவர் இன்று செய்தது சரியா? அந்த அன்பு உள்ளவராக இருந்தால் இப்படிச் செய்யலாமா?

"என்ன அத்தான் செய்தார்?"

"அடி பெண்ணே! உன்னிடம் விடைபெற்று வீர வாளேந்தித்தானே சென்றேன். படை நடத்திச் சென்று கோட்டைகளைத் தகர்த்து, நம்கொடி அங்கே பறக்கவிட்டு எதிரியைச் சிறைபிடித்து வர வேண்டுமென்ற எண்ணத்தோடு தானே சென்றேன். நீ வைத்த பொட்டும் அணிவித்த மாலையும், உடுத்திட்ட பட்டோடும் தானே சென்றேன். சிங்கம் போன்ற தோள் படைத்தவனே! படை நடத்திப்போய் எதிரியை அடக்கி வா. அணி வகுத்துச் செல். தமிழன் கொடி அந்நிய நாட்டிலே பறக்கவிடு என்று சொல்லாது, மன்னன் தானே தேரேறிச் சென்றது சரியா? அவரே படை நடத்திப் போகலாமா? எதிரியின் கோட்டையைப் பிடிக்க அரசனே முந்திச் செல்வதுதான் என்மீது உள்ள அன்பா? எனக்கு உணவளிக்கவும், மது கொடுக்கவும் உள்ள அன்பு இங்கு ஏன் இல்லை? உண்மையான அன்பு உள்ளவராக இருந்தால் என்னைப் படைதிரட்டிப்போ என்று சொல்லாது, தானே படை திரட்டிச் செல்வாரா? இதுதானா என் மீது உள்ள அன்பு?"



பந்திக்கு முந்து, படைக்குப் பிந்து என்று இக்கால வீரர்கள் கூறுகிறார்கள். அக்கால வீரனோ படைக்கு முந்தி அனுப்பவில்லை என்று கோபிக்கிறான். அந்தப் பாடலே இது:—

எமக்கே கலங்கல் தருமே; தானே
தேறல் உண்ணும் மன்னே; நன்றும்
இன்னுள் மன்ற வேந்தே, இனியே
நேரார் ஆரெயில் முற்றி
வாய்மடித்து உரறிநீ முந்து என்னனே.

—புறம். 298.

# பண்டித நேரு பகர்வது கேளீர்!

—[வில்லவன்கோதை]—

"திராவிடம்என்பது கற்பனை." போகுமிடமெல்லாம் எதைப் பற்றிப் பேசினாலும் பேசாவிட்டாலும் 'கனம்' அமைச்சர்கள் இதைப்பற்றி 'ஒரு குரல்' அழுது தீர்க்கிறார்கள். நாட்டை எதிர் நோக்கியிருக்கும் அன்றாடப் பிரச்சினைகளைப் பற்றிப் பேச வேண்டிய அமைச்சர் பெருமக்கள், நம்மை இழித்தும், பழித்தும் பேசுவதில் இனபம் காண்கிறார்கள் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்ப்பார்களேயானால் 'திராவிடம் கற்பனை' என்று கூசாமல் கூறத்துணியார். ஆனால் சரித்திரத்தைப் புரட்டுவதற்கு அவர்களுக்கு நேரமிருக்காது; சாடு சாடு என நம்மைச் சாடுவதற்குத்தான் அவர்கட்கு நேரமிருக்கும். எனவே, அவர்களுடைய டெல்லி எசமானரும், வரலாற்று வல்லுநருமான பண்டித நேரு தன் மகளுக்கு எழுதிய உலக சரித்திரக் கடிதங்களின் ஓர் பகுதியை ஈண்டு தருவோம், "கனம்" அமைச்சர்களின் கண்ணோட்டத்திற்கு.

கடிதம் எழுதியவரோ, பண்டித நேரு; அதைப் பெற்று மகிழ்ந்தவரோ இன்றைய காங்கிரசுத் தலைவியார் இந்திரா காந்தி!

"ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்பே இங்கு பரவியிருந்த மிகப் பழைய நாகரிகமான திராவிட நாகரிகம் இந்திய ஆரியர்களை வெகுவாக ஆட்கொண்டது."

—பக்கம் 37.

"ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தபொழுது அது ஏற்கெனவே நாகரிகம் வாய்ந்த நாடாய் இருந்தது. மொஹெஞ்ஜோ—தாரோவில் நமக்குக் கிடைத்திருப்பனவற்றிலிருந்து ஆரியர்களின் வருகைக்கு நெடுங்காலத்துக்கு முன்னரே இந்தியாவின் வடமேற்குப் பாகத்தில் ஒரு பெரிய நாகரிகம் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகத்தெரிகிறது. ஆனால் இதைப்பற்றி நமக்கு இன்னும் அதிகமாகத் தெரியவில்லை. நமது புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர்கள் — அழிந்தும் சிதைந்தும் கிடக்கும் பழைய கட்டிடங்கள், கல்வெட்டுகள் முதலியவைகளை ஆராய்ந்து அறிபவர்கள் — அங்கே பூமியைத் தோண்டி எல்லாவற்றையும் கண்டுபிடித்த பிறகு இன்னும் சில ஆண்டுகளில் நாம் அதைப்பற்றி அதிகமாகத் தெரிந்து கொள்ளலாம்.

இஃதன்றியும் தென் இந்தியாவில் —ஒருவேளை வட இந்தியாவில் கூடத் திராவிடர்களின் நாகரிகம் மிகவும் சிறப்புற்றிருந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது. அவர்களுடைய பாஷைகள் ஆரியர்களின் சமஸ்கிருதத்திலிருந்து பிறந்தவை அல்ல. மிகவும் பழமையான அப்பாஷைகளில் சிறந்த இலக்கியங்கள் காணப்படுகின்றன......எதிர்காலத்தில் இந்தியாவை மாகாணங்களாகப் பிரிக்கும்போது அவ்வப்பிரதேசத்தின் பாஷை முக்கியமாகக் கவனிக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

இந்தியாவின் உண்மையான பாஷைகளைத் திராவிடம், இந்திய ஆரியம் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்."

—பக்கம் 59.

நூல்: "உலக சரித்திரம்" (முதற் பாகம்) எழுதியவர்: பண்டித நேரு.

தமிழ் மொழிபெயர்ப்பு: ஓ. வி. அழகேசன்.

# கலப்படம்

[ தேனீ ]

யார்மேலாவது கோபம் வந்தால் சாதாரணமாகச் சொல்வது உண்டல்லவா, "உன் தலையில் இடிவிழ" என்று! யார்மீதாவது அப்படி இடி விழுந்துவிட்டால், இடியால் தாக்கப்பட்டவர் உடனே இறந்துவிடுகிறார் என்பது மட்டுமல்ல— அவரது குடும்பமே தழைக்காது என்று ஒரு மூடநம்பிக்கை, இந்த நாட்டில்!

அப்படிப்பட்ட கருத்தைக் கொண்டோருக்காகவே ஒருசெய்தி காத்திருக்கிறது.

கேரளத்தில், மாராயமுட்டம் என்ற ஊரில் ஒரு சலவைத் தொழிலாளி வாழ்கிறாராம். அவருடைய சொத்து, ஒரே ஒரு தென்னை மரமாம். அந்த மரத்தின்மீது, காங்கிரசுக்காரர்கள் பலவந்தமாகக் காங்கிரசுக் கொடியைப் பறக்கவிட்டார்களாம்.

கடந்தவாரம் அங்கே பெருமழை பெய்த போது, அந்தக் கொடிமீது இடிவிழுந்து, மரமும் எரிந்துவிட்டதாம்!

இந்தச் செய்தியை "விஸ்வ கேரளம்" என்ற இதழ் வெளியிட்டிருக்கிறது.

•

## மூன்று எதிரிகள்!

பஞ்சாப் மாநிலத்துக்கு மூன்று எதிரிகள் உண்டு—இதோ அந்த எதிரிகளின் ஜாபிதா, என்று வெளியிட்டிருக்கிறார் அந்த மாநிலத்தின் கவர்னர்!

அவிழ்த்துவிடப்பட்ட கால்நடைகள்.

ஆங்காங்கே திரிகின்ற குண்டர்கள்.

மனமொடிந்த அரசியல்வாதிகள்.

முதல் இரண்டையும் சமாளித்துவிடலாம்—ஆனால் மனமொடிந்த அரசியல்வாதிகள் இருக்கிறார்களே, அவர்களைமாத்திரம் சமாளிப்பது மிகவும் கடினமானது, மக்கள் விழிப்போடு இருந்தாகவேண்டும் என்கிறார்!

•

## அந்தோ பரிதாபம்!

கலப்படம் செய்வது எவ்வளவு ஆபத்தில் கொண்டுபோய்விடக்கூடும் என்பதற்கு இதோ ஒரு உதாரணம்!

ஆப்பிரிக்காவில் உள்ள மொராக்கோ என்ற நாட்டில், விமானத்திற்கு உபயோகப்படுத்தப்படுகின்ற எண்ணெயை, தலைக்கு உபயோகிக்கப்படுத்துகின்ற வாசனை எண்ணெயோடு கலப்படம் செய்து விற்றிருக்கின்றனர் சில வியாபாரிகள்! அதன் பயனாக, அந்த எண்ணெயை உபயோகப்படுத்திய அனைவருக்கும் தலை வழுக்கையாகிவிட்டதாம்

அதைவிட வேடிக்கையானதும் பயங்கரமானதுமான, நிகழ்ச்சி மற்றொன்று, அதே நாட்டில் நடைபெற்று இருக்கிறது.

ஆகாய விமானத்துக்கு உபயோகப்படுத்தப்படும் எண்ணெயை, சமையலுக்கு உபயோகிக்கப்படும் எண்ணெயோடு கலந்து விற்றிருக்கின்றனர், வேறு சில வியாபாரிகள். அந்த எண்ணெயை உபயோகப்படுத்தியவர்கட்கெல்லாம், கால் முடமாகிவிட்டதாம்!

•

## உதவி மேயர் உண்ணாவிரதம்!

உதவி மேயருக்குப் புதுக்கார் ஒன்றை வாங்கிக்கொடுத்தார்கள். அந்தக்கார் எட்டு நாட்கள் அவரது கைவசமிருந்தது—பிறகு அரசாங்கத்தின் உத்திரவின் பேரில் திரும்பப் பெற்றுக்கொண்டார் கமிஷனர்.

இந்த நிகழ்ச்சி நடைபெற்றது, பெங்களூர் நகராட்சி மன்றத்தில்!

இந்த நிகழ்ச்சி பற்றிக் காரசாரமாக விவாதம் நடைபெற்றிருக்கிறது, நகரசபைக் கூட்டத்தில். எதிர்க்கட்சியினர் மட்டுமல்ல, ஆளுங்கட்சியான காங்கிரசுக் கவுன்சிலர்களில் சிலர்கூட, கமிஷனரின் இந்தச் செய்கையை வன்மையாகக் கண்டித்தனராம்.

"இந்த நிகழ்ச்சியால் எனது மானத்திற்குப் பங்கம் ஏற்பட்டிருக்கிறது. ஏனவே உண்ணாவிரதம் இருக்கப்போகிறேன்" என் அறிவித்தாராம் துணைமேயர்.

அந்த முடிவைக் கைவிடுமா மேயர் கேட்டுக்கொள்ள நேரிட் தாம். அரசாங்கத்திடமிருந்து அ தக் காரைபற்றி, முடிவான பதி வரும் வரை, அதை யாரும் உ யோகிக்கக் கூடாது, என்று முடி செய்யப்பட்டதாம், நகரசபைக் கூட்டத்தில்.

•

## மாண்டவர் மீண்ட அதிசயம்!

பதினைந்து நாட்கள் ஆகிவி டன, ஜான் ஹோவார்ட் என்பவரி "சடலத்தை"ப் புதைத்து! இ ரென்று அவர் தபால் நிலையத்து குப்போய், அங்கிருந்த அலு லாளர்களை அதிர்ச்சிக்கு உள்ளா கியது மட்டுமல்ல "இறந்துவிட் ஒருவனோடு கைகுலுக்குங்கள்- இந்த வாய்ப்பு உங்களுக்கு கிடைப்பது அரிது" என்றுரா தனது கரத்தை நீட்டிக்கொண்டே

இந்தச் சம்பவம் ஆஸ்திரேலிய வில் உள்ள மெல்போர்ன் என்னு நகரில் நடைபெற்றது.

அக்டோபர் 31-ம் தேதி அந் நகருக்கு அருகிலுள்ள, யாரா யா என்ற ஆற்றின் கரையில் அவரது உடைகள் காணப்பட்டனவாம் ஆனால்அவரைக்காணவில்லையாம் சுற்றுப்புறத்தில். எனவே அவ ஆற்றில் மூழ்கி இறந்துவிட்டா என்று எண்ணிவிட்டனர்.

மூன்று நாட்கள் கழித்து ஒ பிணம் மிதந்து வந்ததாம். அ ஹோவார்டின் சடலம்தான் என்று கருதி, அவருடைய குடும்பத்தா அந்தப் பிணத்தைச் சகலமரி யாதைகளுடன் அடக்கம் செய்து விட்டனராம்!

சில நாட்களுக்குப் பிறகு ஹோவார்டிடமிருந்து உறவின களுக்குக் கடிதங்கள் வந்தனவாம் "ஆற்றங்கரையில் காணப்பட் உடைகள் என்னுடையவைதான் ஆனால், அவை என்னிடமிருந் எவனோ ஒருவனால் திருடப்பட் டன" என்று நிலைமை விளக்க தந்தாராம் அவர்!

இப்போது அங்குள்ள போலீ சார், வழக்கப்படி புலன் விசாரணை செய்கின்றனராம். எதற்குத் தெரி யுமா? புதைக்கப்பட்ட சடல யாருடையது என்று கண்டுபிடி பதற்காக!

